# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-ருரு] வள்ளுவர் ஆண்டு-உ0கக, ஐப்பசி, Nov'80 [பரல்-ரு

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ௰௧௧, ஐப்பசி<br>நவம்பர் 1980 | பரல் ௩ |
|---|---|---|

## கழகமும் வரலாற்றுக் கலைக்களஞ்சியமும்

கழகம் தொடக்கத்திலேயே பலதுறைகளிலும் வரலாறுகளைத் தொகுத்து அச்சிடுதல் வேண்டுமென்ற தலைசிறந்த நோக்கத்துடன் நூல்களை வெளியிட்டு வருவதை விளக்கி எழுதவேண்டுமென்பது ஆட்சியாளரின் கருத்தாகும்.

எனவே முதற்கண், இரண்டாண்டுகட்கு முன் 'வரலாற்று நூல்கள்' என்ற தலைப்பில் உள்நாட்டஞ்சல் தாளில் அச்சிட்டுப் புலவர்கட்கு அனுப்பப்பெற்றதையும், 'தமிழ்ப்புலவர் வரலாறு' என்ற தலைப்பில் தமிழ்ப்புலவர் வரிசையில் 30 நூல்களும் அகரவரிசையில் 6 நூல்களும் எழுதிய திருவாளர் சு. அ. இராமசாமிப்புலவர் அவர்கள் செந்தமிழ்ச்செல்வி 30ஆவது சிலம்பில் எழுதிய கட்டுரையில் ஒரு பகுதியையும் இங்கே படித்தறிந்து கொள்வது முதன்மையாகும்.

**ஆட்சியாளர் முன்பு வெளியிட்ட உள்நாட்டஞ்சல் :**

### க. வரலாற்று நூல்கள்

பேரன்புடையீர்,

வணக்கம். வரலாற்றுச் செல்வமே நந்தொன்மையினையும் உரிமையினையும் உணர்த்தி வாழ வழிகாட்டுவதாகும் என்பது எனது கருத்து. அக் கருத்தைப் பற்றியே சங்கப்புலவர் வரிசையில் 16 நூல்களும், சங்க அரசர் வரிசையில் 6 நூல்களும், ஏறக்குறைய 770 புலவர் வரலாறுகளைக் கொண்ட தமிழ்ப் புலவர் வரிசையில் 30 புத்தகங்களும், தமிழ்ப் புலவர் அகரவரிசையில் 5 புத்தகங்களும், அறிவியல் அறிஞர்கள் (உள்நாடு, வெளிநாடு), அரசியல் தலைவர்கள் (உள்நாடு, வெளிநாடு), நாடு

கண்டவர், புலவர், கவிஞர், பலதுறைக் கலைஞர்[1] முதலியோர் வரலாறுகள். நாட்டு வரலாறு, மொழி வரலாறு, இலக்கிய வரலாறு ஆகியவைபற்றித் தனித் தனியாக இருநூறுக்கு மேற்பட்ட நூல் களும் ஆங்கிலத்தில் சில நூல்களும் கழகம் வெளியிட்டுள்ளது. அவற்றிற் பெரும்பாலன ஒரு பதிப்புக்கு மேல் வெளியிடப் பெற வில்லை. அவற்றை நூல்நிலையங்கட்கு வாங்காமையே அதற்குரிய காரணமாகும். ஆசிரியர்கள் தம் மாணவர்கட்கு அவற்றைக் கற்பிக் காமையும் பெற்றோர்கள் தம் பிள்ளைகட்குக் கற்பிக்காமையும் மற்றொரு காரணமாகும்.

இஃதிங்ஙனமிருப்பினும் மேலும் வரலாறுகளைத் தொகுப்பதில் யான் தளர்ச்சியுறவில்லை. யான் விரும்பி வேண்டியவாறு நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியார் அவர்கள் எழுதித் தந்த 'யான் கண்ட புலவர்கள்' என்ற நூலொன்று வெளியிடப் பெற் றுள்ளது. மொழிப் பேரறிஞர் பாவாணர் அவர்கள் புலவர் சிலர் வரலாறுகளை எழுதித் தந்துள்ளனர். தவயோகி சுத்தானந்த பாரதியார் புலவர் சிலர் வரலாறுகளை எழுதியனுப்பியுள்ளதோடு மேலும் எழுதிவருகின்றனர்.

அவ்வாறே தாங்கள் பாடங்கேட்ட புலவர்கள், நெருங்கிப் பழகியுள்ள புலவர்கள், பழகும் வாய்ப்பு இல்லாவிடினும் பிறர் சொல்லக் கேட்ட புலவர்கள் ஆகியோரைப் பற்றித் தங்கட்குத் தெரிந்தவரை வரலாற்றுக் குறிப்புகளையும் சுவையான நிகழ்ச்சி களையும் எழுதி அனுப்பும்படி அன்போடு வேண்டுகிறேன்.

முதுபெரும் புலவர் டாக்டர் வே. சாமிநாதையர் அவர்கள் தம் ஆசிரியர் வரலாற்றை விரிவாக எழுதியதோடு தம் வரலாற்றை யும் ஒரு குறிப்பிட்ட காலம்வரை எழுதியுள்ளனர். அவர்களைப்போல் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களும் 'தம் வரலாற்று நூலை' எழுதியுள்ளனர். எனவே, பெரும் புலவர்கள் தங்கள் வரலாறுகளைத் தாமே எழுதிவைப்பது இன்றியமையாமையாகும்.

தமிழில் அச்சுக்கலை ஏற்பட்டு வெளியிடப்பெற்ற பழைய நூல்களில் அக்காலத்துப் புலவர்கள் வழங்கிய சாற்றுக் கவிகள் வெளியிடப்பெறும் மரபு இருந்தது. எனவே, பெரும்பான்மையான பழைய நூல்களிலுள்ள சாற்றுக் கவிகள் படி எடுத்து நூலகத்திலே வைக்கப்பெற்றுள்ளன. அவற்றானும் ஒரு காலத்துப் புலவர்கள் இன்னின்னார் என்பதும், புலவர் சிலரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களும் கிடைக்கப்பெறுகின்றன. அவற்றையெல்லாம் ஒரு நூலாக வெளியிடுவது முதன்மையாகும். பொருட்செலவு மிகுதி ஏற்படினும் அது வீண் செலவாகாது என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் மொழி வரலாறு, இலக்கிய வரலாறு, நாட்டு வரலாறு, அரசியல் கட்சிகளின் வரலாறு, இனவரலாறு ஆகியவையும் திருக்

கோயில்கள், திருமடங்கள், சமயமன்றங்கள், தமிழ்க் கழகங்கள் ஆகியவற்றின் வரலாறுகளும் புலவர், கவிஞர், பலதுறைக் கலைஞர் முதலியோர் வரலாறுகளும் நம் பழைமையினை யுணர்தற்கும், நம் உரிமைகளைக் காப்பதற்கும், நம் முன்னோர் சென்ற சீரிய வழிகளைப் பின்பற்றி நடப்பதற்கும், வழிகாட்டும் செல்வங்களாகும். இத்தகைய வரலாறுகளின் இன்றியமையாமைபற்றித் தங்கள் உள்ளத்தில் எழும் கருத்துக்களைக் கடமையுணர்வோடு தனியாக எழுதி அனுப்பின் நன்றியுடையவனாவேன். அதனால் நந்தமிழ் மக்களிடத்தே வரலாற்றுணர்வு பெருகும் என்ற நம்பிக்கையுடையேன்.

முதற்கண் தங்கள் வரலாற்றைக் கூடுமானவரை விரிவாக எழுதியனுப்புவதோடு, தங்களுக்குத் தெரிந்த புலவர் பெருமக்களைப் பற்றி அவர்கள் வாழ்ந்தகாலம், படிப்பு, பட்டம், பணியாற்றிய இடம், இயற்றிய நூல்கள், உடன் வாழ்ந்தோர், அவரிடம் பயின்ற மாணவர்கள் போன்ற விரிவான செய்தியைத் தனித்தாளில் எழுதி அனுப்பும்படி வேண்டுகிறேன்.

செல்வியில் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் எழுதிய கட்டுரை:

## உ. தமிழ்ப்புலவர்கள் வரலாறு

### வரலாறுகள் மறைவு

ஓர் அறிஞரின் ஊனுடல் மறையத்தொடங்கியவுடன் அவருடைய வரலாற்று நிகழ்ச்சிகளும் மறையத்தொடங்கிவிடுகின்றன. ''மெய்யாயிருந்தது நாட்செல, நாட்செல, வெட்ட வெறும் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே'' என்று கூறுமாறு சில ஆண்டுகளில் அடியோடு மறைந்துவிடுகின்றன. நூல் எழுதிய புலவர்களாயின் நூன்முகப்பில் பெயர்மட்டும் காணப்பெறுகின்றது. வேறொரு செய்தியும் தெரிகிறதில்லை. நூல்கள் எழுதாத புலவர்களாக இருப்பின் அவர்கள் பெயருங்கூட மறையத்தொடங்கிவிடுகின்றது.

### தம் வரலாற்றைத் தாமே எழுதுதல்

காந்தியடிகள் தம்முடைய வரலாற்றைத் தாமே எழுதினார். அவரைப் பின்பற்றித் தமிழ்நாட்டில் தமிழறிஞர்கள் சிலரும் தங்கள் வரலாற்றைத் தாங்களே எழுதலானார்கள். டாக்டர் உ. வே. சாமிநாதையர் தமது வரலாற்றின் பெரும்பகுதியையுந் தாமே எழுதினார். ஆனால் அந்த வரலாறு முடிவதற்குள் அவர் காலமானார். பெரும்புலவர்கள் விரைவில் மறைந்துவிடுகிறார்கள். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் 32 ஆம் அகவையில் காலமானார். சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் 32 ஆம் அகவையில் காலமானார். எனவே, அறிஞராயினர் தாம்

மறைவதற்குள் தமது வரலாற்றைத் தாமே எழுதிவைத்துவிடுதல் வேண்டும்.

## கழக வரலாற்றுக் கலைக்களஞ்சியம்

கழக வரலாற்றுக் கலைக்களஞ்சியத்தில் இடம்பெற வேண்டிய நூல்களில் முதற்கண் தமிழ்ப் புலவர் வரலாறு, ஒன்று முதல் முப்பது நூல்களைப்பற்றி இங்கே எழுதப் பெறுகின்றது. இவை அனைத்தையும் எழுதியவர் கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களாவர். இவர்களே கழகம் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கையில் மிகுதியான நூல்களை எழுதிப் புகழ்பெற்றவராவர். இவர் செவிப்புலன் இழந்தவர் ; ஆனால் நினைவாற்றல் மிக்குடையவர் ; அயராது உழைக்கும் திறவினர்.

இவர் சென்னை மறைமலையடிகள் நூலகம், நெல்லை சிவஞான முனிவர் நூல்நிலையம், மற்றும் மதுரை, மன்னார்குடி, கரந்தை, குடந்தை, தில்லை ஆகிய ஊர்களிலுள்ள நூல் நிலையங்கள், சென்னைக் கன்னிமாரா நூலகம், தொல்பொருள் ஆய்வக நூல் நிலையம் பேரறிஞர் பலரின் இல்ல நூல்நிலையங்கள் ஆகியவற்றிற்குச் சென்று நூல்களைப் பார்வையிட்டுப் புலவர் வரலாறுகளை எழுதினார் என்பது அறிதற்பாலது. இவர் எழுதிய தமிழ்ப் புலவர் வரலாறுகளில் முதற் புத்தகம் 1947 லும் 30வது புத்தகம் 1972இலும் எழுதப்பட்டனவாகும். இம் முப்பது புத்தகங்களிலும் 770 புலவர்களின் வரலாறுகள் 4405 பக்கங்களில் அடங்கியுள்ளன. ஒன்று முதல் 15 வரையுள்ள நூல்களிற் கண்டுள்ள புலவர்களின் பெயர் அகரவரிசைப் பட்டியல் 15ஆம் புத்தகத்தின் இறுதியிலும் 16 முதல் 21 வரையுள்ள புத்தகங்களிற் கண்டுள்ள புலவர்களின்பெயர் அகரவரிசைப் பட்டியல் 21ஆம் புத்தகத்தின் இறுதியிலும், 22 முதல் 30 வரையிலுள்ள நூல்களிற் கண்டுள்ள புலவர்களின்பெயர் அகரவரிசைப் பட்டியல் 30ஆம் புத்தகத்தின் இறுதியிலும் சேர்க்கப்பட்டுள்ளன. இம் முப்பது புத்தகங்களும் மும்மூன்றாகப் பிரித்துச் சேர்த்து நூல்நிலையங்களில் அழகுற அமைப்பதற்கேற்றவாறு 10 தொகுதிகளாகக் கட்டடஞ் செய்யப்பெற்றுள்ளன.

இவர் எழுதிய 31ஆம் புத்தகம் இப்போது அச்சிடப்பட்டு வருகிறது. மேலே குறிக்கப்பெற்ற 30 நூல்களில் ஒருசில மட்டும் இரண்டாம் பதிப்பாக அச்சிடப்பெற்றுள்ளன.

அடுத்து மேலும் அச்சிடப்பட்ட புத்தகங்களில் கிடைக்கப் பெற்ற குறிப்புக்களைக்கொண்டு ‘தமிழ்ப் புலவர் அகரவரிசை’ என்ற தலைப்பில் 5 புத்தகங்கள் 1959 முதல் 1962 முடியக் கழகவழி அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளன. இவற்றில் மூன்று பகுதிகளை முதல் தொகுதியாகவும் மற்றும் 2 பகுதிகளை இரண்டாம் தொகுதி

யாகவும் வெளியிட்டுள்ளோம். முதல் தொகுதியில் 1016 பக்கங்களில் 1595 தமிழ்ப் புலவர்களின் சுருக்கமான வரலாறுகள் அடங்கியுள்ளன. இரண்டாவது தொகுதி, முதல் இரண்டு பகுதி களில் 646 பக்கங்களில் 1039 புலவர்களின் சுருக்க வரலாறுகள் இடம்பெற்றுள்ளன.

2 ஆம் தொகுதியின் 3-ஆம் பகுதியில் தமிழ்ப் புலவர் வரிசை 1 முதல் 25 புத்தகங்களில் உள்ள புலவர்கள் எழுதிய நூல்கட்கும் தமிழ்ப் புலவர் அகரவரிசை தொகுதி 1, 2 இன் 5 பகுதிகளில் உள்ள 2634 புலவர்கள் எழுதிய நூல்கட்கும் அகரவரிசைப் பட்டியல், புத்தக எண், பக்க எண் முதலிய குறிப்புகளுடன் அச்சிடப்பெற்றிருக்கின்றது.

அதன்கண் மொத்தம் 8071 புத்தகங்களின் பெயர்கள் கூறப்பெற்று உவகை தரக்கூடியனவாய் அமைந்திருக்கின்றன. அந்தப் புத்தகங்களின் அட்டவணையினை ஆசிரியர் தொகுக்கும் போது தமிழ்ப் புலவர் வரிசையில் 1 முதல் 25 புத்த கங்களே வெளிவந்தன. அதன்பின் வெளியிடப் பெற்ற 26 முதல் 30 வரையுள்ள நூல்களில் மேலும் 1110 நூல்களின் பெயர்கள் காணப் பெறுகின்றன. இவை அகரவரிசைப்படுத்தி அச்சிடுவதற்கேற்ப ஆயத்தநிலையில் உள்ளன. இவை பின்னிணைப் பாகச் சேர்க்கப்பெறும். இந்தப் பட்டியலைக் கொண்டு இந்த நூல் இன்னாரால் எழுதப்பட்டதென்று அறிய வாய்ப்புள்ளது.

மேலும் மதுரை, பழநி, திருச்செந்தூர், திருத்தணிகை போன்ற பெரிய திருப்பதிகளைப் பற்றிய பாடல்களும் வரலாறுகளும் தொகுக்கப்பெற்ற இந்நூற்பட்டியலின்வழி அறியக்கிடப்பது மகிழ்ச்சிக்குரியது. இவையே அன்றித் தமிழ்ப் புலவர் சிலருடைய வரலாறுகள் தனித்தனி நூல்களாக வெளியிடப்பட்டிருக்கின்றன. அடியிற்கண்டவை அந்நூல்களாகும்.

## தமிழ்ப்புலவர் வரலாறு

### தனி நூல்கள்

அகத்தியர் வரலாறு
அப்பர் சுவாமிகள் வரலாறு
அரசஞ் சண்முகனர்
கவிக்குயில் பாரதியார்
உரிமைக்கவிஞர் பாரதியார்
கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை
கா. சு. பிள்ளை (எம்.எல். பிள்ளை)
கவிமன்னர் மூவர்
கிறித்தவப் புலவர்கள்
குமரகுருபர அடிகள்
சிங்கத் தமிழர் சிதம்பரனர்
சிவஞான முனிவர் வரலாறு
சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு
சென்னைத் தமிழ்ப் புலவர்கள் 1-2
சேக்கிழார் சுவாமிகள் வரலாறு
சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை
டாக்டர் சேதுப்பிள்ளை
சோமசுந்தர நாயகர் வரலாறு
தமிழ்நாட்டுக் கவிஞர்கள் ஐவர்
தமிழ்நாட்டுப் பெண்மணிகள்
தமிழ்ப் பெரும்புலவர் மூவர்
தமிழ்ப் பேரறிஞர் அறுவர்

தமிழ்ப் பேரறிஞர் நால்வர்
தமிழ்ப் பேரறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர்
தமிழ்ப் பேரொளி அண்ணா
தாயுமான சுவாமிகள் வரலாறு
திருவள்ளுவரும் சிவப்பிரகாசரும்
திருஞானசம்பந்தர் வரலாறு
திரு. வி. கலியாண சுந்தரனார்
திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் 1-2
தெய்வப் புலவர் திருவள்ளுவர்
நாவலர் சோமசுந்தர பாரதியார்
நாவலர் நால்வர்
நெல்லைத் தமிழ்ப் புலவர்கள் 1-2
பட்டினத்தடிகள் வரலாறு
பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார்
பல்சுவைப் பேரறிஞர் மறைமலையடிகள்
பெருந்தகை மு. வ.
மணிவாசகப் பெருமான் வரலாறு
மதுரை இருபெரும் புலவர்கள்
மறைமலையடிகள் வரலாறு
மறைமலையடிகள் வரலாற்றுமாட்சி
மறைமலையடிகள் வரலாறு வாழ்வும் பணியும்
மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் 1-2
வ. வே. சு. ஐயர்
வள்ளலார் யார்?
விபுலானந்த அடிகள்
வ. சு. செங்கல்வராய பிள்ளை
குமரிநாட்டுப் புலவர்கள்
கொங்குநாட்டுப் புலவர்கள்
பாண்டிநாட்டுப் புலவர்கள் II
சோழநாட்டுப் புலவர்கள் 1 - 2
தொண்டைநாட்டுப் புலவர்கள் 1—2 பகுதிகள்
யாழ்ப்பாணப் புலவர்கள்
யான்கண்ட புலவர்கள் (பம்மல் சம்பந்த முதலியார் எழுதியது)
Saint Appar in English
Grand Epic of Saivism

இனி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டே புகழ் பெற்று விளங்கும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்க நூல்களிலிருந்து சங்கப் புலவர் வரிசையில் 16 புத்தகங்களும் சங்ககால அரசர் வரிசையில் 6 புத்தகங்களும் புலவர் கா. கோவிந்தன் எம்.ஏ., அவர்களால் எழுதப்பட்டு வெளி வந்துள்ளன. புலவர் கா. கோவிந்தன் அவர்கள் கழகப்புலவர்களில் ஒருவராகிய உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்களின் உளம் கவர்ந்த மாணவராவார். இவர் 1952 முதல் 1954 வரையுள்ள ஆண்டுகளில் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை 16 புத்தகங்களையும் தொடர்ந்து எழுதித் தந்தனர். ஒவ்வொரு புத்தகத்தையும் உடனுக்குடன் அதன் சிறப்புக்கருதி ஆட்சியாளர் பெருவிருப்பங் கொண்டு அச்சிட்டு வெளியிட்டு வந்தனர். இப் பதினாறு புத்தகங்களிலும் 2001 பக்கங்களில் 469 சங்ககாலப் புலவர்கள் இடம் பெற்றுள்ளனர். இவற்றில் முதல் 6 புத்தகங்களில் ஒருசில இரு பதிப்புகளும் ஒருசில மூன்று பதிப்புகளுமாகப் பதிப்பிக்கப் பெற்றிருக்கின்றன. இவற்றில் முதல் 4 புத்தகங்களும் தனித்தனியே கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார் ஆகிய சங்கப் புலவர் நால்வர் வரலாறுகளைக் கொண்டன. இவற்றை எழுதுந் தகுதியுடையவர் புலவர் கா. கோவிந்தன் அவர்களே ஆவர். அவர்கள் தொடர்பு ஆட்சியாளருக்குக் கிடைத்தமையினை மிகவும் போற்றிப் பாராட்டுகின்றனர்.

அடுத்துச் சங்ககாலப் புலவர்களைப் போற்றி ஆதரித்த சங்க கால அரசர்களைப் பற்றி 'சங்ககால அரசர்வரிசை' என்ற தலைப்பில் 6 நூல்களை 1954 முதல் 1955 வரை எழுதித் தரவும் அவற்றை உடனுக்குடன் ஆட்சியாளர் மிக்க விருப்புடன் அச்சிட்டு வெளிப் படுத்தினர். இவற்றில் முதல் மூன்று நூல்களும் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தர் வரலாறுகளைப் பற்றியனவாகும். அவை ஒவ்வொன்றும் இரண்டாம் பதிப்பினை மட்டும் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இவ் ஆறு நூல்களும் 708 பக்கங்களில் 160 அரசர் வரலாறுகளைக் கொண்டுள்ளன. சங்க இலக்கியமெனத் தமிழ் மக்களுக்குக் கிடைக்கப் பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்களில் காணப்படும் புலவர்களையும், அரசர்களையும் பற்றிய வரலாறு மட்டுமே மேலே கண்ட தொகுதிகளில் காணப் பெறுவனவாகும். இவ்வரிய நூல்கள் ஒவ்வொரு பள்ளியிலும் கல்லூரியிலும் மற்றும் ஒவ்வொரு நூலகத்திலும் கட்டாயமாக இடம் பெறுதல் வேண்டும். இவை மாணவர்களும், தமிழ் மக்களும் படித்து இன்புற வேண்டிய நூல்களாகும். இவற்றில் சில ஆண்டுதோறும் பல்கலைக் கழகங்களில் கட்டாயப் பாடமாக அமைக்கப்பெறுதலும் வேண்டும்.

புலவர் கோவிந்தன் அவர்கள் ஆழ்கடலில் முத்தெடுப்பது போல் சங்கநூற் கடலில் ஆழ்ந்து அரிய கருத்துக்களைத் தொகுத்துப் புலவர்கள் அரசர்களின் வரலாறுகளை விளக்கி யுள்ளார்கள். இவற்றுள் சில ஒரு பதிப்புக்கு மேல் வராமல் இருப்பது ஆட்சியாளருக்கு மிக்க வருத்தம் தருவதாக உள்ளது. பேரறிஞர் அண்ணா அவர்களின் மனங் கவர்ந்த நண்பர் ஆதலால் சட்டமன்ற அவைத் தலைவராகத் தி.மு.க. அரசின் தொடக்க முதல் அ.தி.மு.க. அரசு பதவிக்கு வரும்வரையிலும் அமர்ந்திருந்தார். அவர்கள் 'கால்டுவெல் எழுதிய (Caldwell Comparative Grammar) என்ற நூலை அழகு தமிழில் மொழிபெயர்த்துக் 'கால்டுவெல் ஒப்பிலக்கணம்' வெளியிட்டுப் புகழ் பெற்றவர்கள் ஆவர். இவர்களைப் புலவர் கோவிந்தன் என்று கூறுவதைவிடச் சங்கநூற் பெரும்புலவர் கா. கோவிந்தன் என்றே ஆட்சியாளர் அவர்களைப்பற்றிப் பேசுவதுண்டு.

இனி ஏனைய துறைகளில் கழகம் பதித்துள்ள வரலாற்று நூல்களைப் பற்றிய குறிப்புக்களை வெளியிட்டுக் 'கழகமும் வரலாற்றுக் கலைக்களஞ்சியமும்' என்ற தலைப்புக்குச் சிறப் பூட்டி மகிழ்ச்சியுறுவோம்.

---

# மதுரைத் தமிழ்க் கழகம்

[ஞா. தேவநேயன்]

தமிழ்மொழியும் இலக்கியமும் நாகரிகமும் பண்பாடும் வரலாறும் போற்றுதல் பற்றி, தமிழ்நாட்டு முதலமைச்சர் மாண்புமிகு மா. கோ. இராமச்சந்திரனர் இதுவரை செய்துள்ள ஏற்பாடுகளுள், வருகின்ற புத்தாண்டு வாழ்த்துப்போல் சனுவரித் தொடக்கத்தில், பாடல்மிக்க கூடலுற்ற மாட மதுரையில், பனிமலை யெழுச்சியும் குமரிமலை முழுக்கும் கண்ணெதிரில் நிகழ்ந்தாற்போல் காட்டவிருக்கும் திரைப்படப் பிடிப்பும்,

> ''சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
> உறைவா னுயர்மதிற் கூடலி னுய்ந்தவொண் டீந்தமிழ்''

என்று மாணிக்கவாசகர் பாடிய தமிழ் வளர்க்குங் கழகம் ஒன்று நிறுவும் திட்டமும், உலகம் பாராட்டுமளவு தலைசிறந்தனவாகும்.

இவற்றுள், கனவுபோல் தோன்றி மறையும் திரைப்படத் தினும், நனவாக நிலைத்து நின்று நாட்டிற்கு நலம் பயக்கும் கழக நிறுவனம் சாலச் சிறந்த தென்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

## ஒரே கழகம்

பண்டைத் தமிழகம் சேர சோழ பாண்டியம் என்னும் மூவேந்தகமாகப் பிரிந்து, குமரிமலைமுதற் பனிமலை வரை பரவி யிருந்ததேனும், பாண்டியம் என்னும் ஒரே நாட்டில், ஒவ்வொரு காலத்திலும் ஒரே கழகம் இருந்து வந்தது. தமிழுலகெங்கணு முள்ள தலைமைப் புலவரெல்லாம் அதிற் கலந்திருந்தனர்.

தலையிடை கடையென முக்கழகம் இருந்ததாகச் சொல்லப் படினும், பாண்டி நாட்டிலேயே பாண்டியரே கழகம் நிறுவி வந்ததால், உண்மையில் அம் மூன்றும் ஒன்றே. கடல் கோளாற் பாண்டியராட்சி இடையீடுபட்டதினலேயே, மூவேறிடத்தில் மூவேறு காலத்தில் கழகம் நிறுவ நேர்ந்தது. இரு கடல்கோளும் நிகழ்ந்திராவிடின், தலைக் கழகம் என்னும் ஒன்றே இறுதிவரை தொடர்ந்திருக்கும்.

பழம் பாண்டி நாடாகிய குமரிநாடு, தமிழ் தோன்றிய நிலமாத லாலும், அயன்மொழிவாடை இம்மியும் வீசாத செந்தமிழ் நாடாத லாலும், பாண்டியர்க்குத் தாய்மொழிப்பற்றுத் ததும்பி வழிந்தத

னுலும், தமிழ்மகளே கலைமகளுமாயிருந்ததனுலும், அறிவை வளர்த்தல் அரசன் கடமையாதலாலும், பாண்டியர்க்குத் தமிழை வளர்த்துப் போற்றிக் காக்கும் கழகம் நிறுவாதிருத்தல் இயலவில்லை.

17ஆம் நூற்ருண்டிலிருந்த தளவாய் இரகுநாத சேதுபதி யென்னும் சிற்றரசர் பன்னிரு புலவரைப் போற்றிக் காக்கவும், இந் நூற்ருண்டுத் தொடக்கத்தில் பாலவநத்தம் வேள் பாண்டித் துரைத்தேவர் புலவர் இருவரைப் போற்றிக் காக்கவும் நூற்று வர்க்கு மேற்பட்டவரை ஆட்டைவிழாவிற் கூட்டவும், ஆற்றலரா யிருந்திருக்கவும், பத்தாயிரம் ஆண்டுகட்குமுன் இந்தியா அளவு நிலப்பரப்புள்ள குமரிநாட்டை ஒரு குடைக்கீழ் ஆண்ட பாண்டிய னுக்குத் தமிழ்ப் பற்றும், புலவர் ஐந்நூற்று நாற்பத்தொன்மரைப் போற்றிக் காக்கும் செல்வச் சிறப்பும் இருந்திராதென்று கொள்வது, எத்துணை இரங்கத்தக்கதாகும்!

தலைக் கழகத்தில் அகத்தியரும் தொல்காப்பியரும் இருந்த தில்லை. தலைக் கழகக் காலம் கி.மு. தோரா. 10,000—5,000. அகத்தியர் தமிழகம் வந்த காலம் கி. மு. தோரா. 1200. தொல்காப் பியர்காலம் கி. மு. 6ஆம் நூற்ருண்டு. தமிழின் முதுபழந் தொன் மையாலும், வரலாற்றறிவும் காலவாராய்ச்சியும் இன்மையினுலும், மூக்கழக வரலாற்றில் முன்னவரையும் பின்னவரையும் ஒருகாலத் தவராக மயக்கிவிட்டனர். இதனுல், கழகமே யிருந்ததில்லை யென்பது காட்டிக் கொடுக்குந் தன்மையைத்தான் காட்டும்.

நகர அடிப்படையிலும், மாவட்ட அடிப்படையிலும், மாநில அடிப்படையிலும், நாட்டு அடிப்படையிலும், பல்வேறு தமிழ்க் கழகங்களைத் தோற்றியிருப்பதை அறவே நீக்கிவிட்டு, பழம் பாண்டிநாட்டுத் தமிழ்க் கழகம் போன்று ஒரே உலகப் பொது மாபெருந் தமிழ்க் கழகம் நிறுவ வேண்டும். அதன் கிளைகள் பல்வேறிடங்களில் இருக்கலாம்.

**நிலவரம் பின்மை**

தமிழர் பலநாடுகளிலும் தீவுகளிலும் குடியேறியிருப்பதால், தமிழுலகம் அனைத்தையும் தழுவிய தமிழ்க் கழகமாயிருத்தல் வேண்டும்.

**தொகைவரம் பின்மை**

தலைக் கழகப் புலவர் ஐந்நூற்று நாற்பத் தொன்பதின்மர்; இடைக் கழகப் புலவர் ஐம்பத்தொன்பதின்மர்; கடைக் கழகப்

புலவர் நாற்பத்தொன்பதின்மர். நிலப்பரப்பிற் கேற்றவாறு, புலவர் தொகை வேறுபட்டிருந்தது. மற்றப்படி, சிவனியப் புலவர் எழுவர், திருமாலியப் புலவர் எழுவர், சமணப் புலவர் எழுவர், புத்தப் புலவர் எழுவர், ஆரிய மதப் புலவர் எழுவர், உலகியல் மதப் புலவர் எழுவர், மதமற்ற புலவர் எழுவர் என்றோ, வேறு வகையாகவோ புலவர் தொகை அமையவில்லை. தகுதியுடையவர் அனைவரும் இடம்பெறல் வேண்டும்.

**புலவர் தகுதி**

ஒரு தமிழ்ப்புலவர் கல்லூரியில் மாணவராகப் பயின்றோ, தனியாக ஒரு பெரும் புலவரிடம் கற்றோ, பல்கலைக் கழகங்கள் நடத்தி வரும் தேர்வெழுதித் தேறிப் புலவர் பட்டம் பெற்றவர்க்குள், நுவலாசிரியராகவோ (போதகாசிரியராகவோ), நூலாசிரியராகவோ, உரையாசிரியராகவோ, இதழாசிரியராகவோ, ஆராய்ச்சியாளராகவோ பல்லாண்டு பணியாற்றி அவரவர் துறையில் அதிகாரியென அறிஞரால் ஒப்புக்கொள்ளப்பட்டவரே, தமிழ்ப்புலவர் கழக வுறுப்பினராகத் தக்கார்.

இலக்கண அறிவும் புலவர் பட்டமும் இன்றியமையாத அடிப்படைத் தகுதியாகும். ஆங்கிலத்திற் பட்டம் பெற்றவரையே ஒப்புக்கொள்ளும் முறையைத் தமிழிலும் கடைப்பிடித்தல் வேண்டும். மேடைப் பேச்சாளராகவோ இதழாசிரியராகவோ இருந்தால் மட்டும் போதாது. இலக்கண அறிவிற்குப் பல்கலைக் கழகப் புலவர் பட்டமே சான்றுதல் வேண்டும். தேர்வெழுதாது பெறும் கண்ணியப் (Honorary) பட்டமும் சான்றாகாது.

**வரிசையறிதல்**

புலமைச் சான்றுன பல்வேறு திறங்களுள், கடைக் கழகச் செய்யுட்கும் பனுவற்கும் உரைவரையும் ஆற்றல் சாலச் சிறந்தது. நாவலர் வேங்கடசாமி நாட்டாருக்குப் பின் அடுத்தபடியாக அத் திறமையுடையார், முதுபெரும் புலவர் உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளையே. அவரைத் தலைவராகக் கொண்டு புலவரைத் தேர்ந்தெடுப்பது தலைசிறந்த வகையாகும்.

*"புலமிக் கவரைப் புலமை தெரிதல்*
*புலமிக் கவர்க்கே புலனும்—நலமிக்க*
*பூம்புன லூர பொதுமக்கட் காகாதே*
*பாம்பறி யும்பாம்பின் கால்."* (பழமொழி, 7)

அவருக்கு அடுத்தவர் முதுபெரும் புலவர் வேணுகோபாலப் பிள்ளையே.

தமிழ்ப்புலவருள், வையாபுரி வழியினர் (Heretic School) என்றும், மறைமலையடிகள் வழியினர் (Orthodox School) என்றும், இரு முரண்பட்ட கூட்டத்தார் உளர். மறைமலையடிகள் போல் முற்றும் தனித்தமிழே வழங்கவேண்டும் என்பதை எவரும் மறுக்கலாம். ஆயின், உண்மையான வரலாற்றை ஒருவரும் மறுக்கவோ மறைக்கவோ மாற்றவோ ஒண்ணுது. ஆதலால், சமற்கிருதத்திலிருந்து தமிழ் வந்ததென்றும், அடிப்படைத் தமிழ்ச் சொற்களெல்லாம் சமற்கிருதமென்றும், பாணினீயத்தின் வழிப்பட்டது தொல்காப்பியம் என்றும், சிந்துவெளிநாகரிகம் ஆரியர தென்றும், இருக்கு வேதத்திற்குப் பிற்பட்டது தமிழ் என்றும், தமிழர் வடமொழிப் பரதசாத்திரத்தினின்று நடமும் நாடகமுங் கற்றுக் கொண்டனர் என்றும், கொச்சைத்தமிழையும் செந்தமிழ் போற் கொள்ளவேண்டு மென்றும், அசோகன் கல்வெட்டுப் பிராமியெழுத்தினின்று தமிழ்நெடுங்கணக்குத் தோன்றிற் றென்றும், வடமொழி தேவமொழி யென்றும், பிராமணர் நிலத்தேவர் என்றும், திருக்கோயில்வழிபாடு வடமொழியிலேயே நடைபெறல் வேண்டுமென்றும், இந்தியை எதிர்த்தல் கூடாதென்றும், தமிழர் வெளிநாட்டினின்று வந்தவர் என்றும், பிறவாறுந் தமிழுக்கு மாருகவும் கேடாகவும் சொல்வாரும் எழுதுவாரும் எல்லாம் தமிழ்க்கழகத்தில் இடம் பெறத் தக்காரல்லர்.

தமிழை முழுத்தூய்மையாகப் பேசாவிடினும், இயன்றவரை தூய்மையாகப் பேச முயலவேண்டும்; தமிழ்ப்பெயருந் தாங்க வேண்டும்.

உலகப்பொதுமை

இன குல மத இட கட்சி வேறுபாடின்றித் தகுதியொன்றே பற்றி, எல்லாருஞ் சேர் தற்கேற்ற கழகமாயிருத்தல் வேண்டும்.

இருப்பிடம் மதுரை.

நடைமுறை

பல்துறைப்பட்ட தமிழாராய்ச்சியே தமிழ்க்கழகத்தின் தலைமைப் பணியாயிருத்தல் வேண்டும். பண்டைத் தமிழ்க்கழகங்களும் செய்த பணி இதுவே. "அவர் தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை யென்ப." "அவர் தமிழாராய்ந்தது கபாடபுரம் என்ப." "அவர் தமிழராய்ந்தது உத்தர மதுரை யென்ப." என்றே முக்கழகப் பணியும் பற்றி முக்கழகவரலாறு கூறுதல் காண்க. "சிறைவான்.........உயர்மதிற் கூடலினுய்ந்த வொண்டீந்தமிழ்" என்றே மாணிக்க வாசகரும் பாடியிருத்தல் காண்க.

ஆராய்ச்சித் தகுதி மதிநுட்பம், பரந்த கல்வி, நடுநிலைமை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறி யவா என்னும் ஆறும். இவ்வாறும் இல்லார் போலியாராய்ச்சியார், பொருளீட்டவே வல்லார்.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனமும் இக்கழகமும் ஒன்றாகவே யிருக்கலாம்.

உரைவேந்தர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை மதுரை யிலேயே யிருப்பதால், அடிக்கடி சென்று கழக ஆராய்ச்சியை மேற் பார்த்து வரலாம்.

நாடாட்சித் தலைவர் (முதலமைச்சர்) பாண்டியன் போல் என்றும் நிறுவனத் தலைவராயிருப்பர்.

ஆண்டுதோறும் ஆட்டைவிழாவும் அரங்கேற்றமும் நிகழலாம். அரங்கேற்றமும் பரிசளிப்பும் பண்டைநாட்போன்றே நடந்தேறல் வேண்டும். கழகத்தில் அரங்கேறிய நூலே நாட்டில் உலவுதலும் நிலவுதலும் வேண்டும்.

செலவு பொருள் வருவாய்கள்

தமிழ்நாட்டரசு ஒதுக்கீடு, நடுவ அரசு ஒதுக்கீடு, திரவிடநாடு களின் ஒதுக்கீடு, பெருஞ்செல்வர் நன்கொடை, தமிழ் நாட்டுத் திருமடங்களின் திருத்தானம், திருப்பதிவேங்கடவர் திருவீகை, பல்கலைக்கழகங்களின் பணவுதவி, ஒன்றிய நாட்டினங்களின் கல்வி யறிவியற் பண்பாட்டுக்கழக (UNESCO) ஒப்புரவுத்தொகை பல்கலைக்கழக நல்கைக் குழு (U. G. C,) நல்கை முதலியன கழகச் செலவிற்குப் பொருள்தேடும் வழிவகைகளாம்.

கழகப் பெயர்

முதலிரு கழகங்களும் கழகம், கூடல், தொகை, அவை, மன்றம் முதலிய சொற்களாலேயே குறிக்கப்பட்டு வந்தன. அக் காலத்தில் ஆரியம் என்னும் பேரும் தோன்றவில்லை. சங்கம் என்னும் வடசொல் கி. பி. 9ஆம் நூற்றாண்டிலேயே சமணரொடு தமிழகம் புகுந்திருத்தல் வேண்டும்.

பதினாறும் நூற்றாண்டினரான பரஞ்சோதி முனிவர், தம் திருவிளையாடற் புராணத்தில், "கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து" என்று பாடியிருப்பதால், இன்றும் கழகம் என்னும் சொல்லையே ஆளலாம்.

வடமொழியிற் சங்கம் என்னும் சொல் ஸம்க (samga) என்னும் வடிவுபெறும். அதை samgha என்றும் திரித்து ஸம்ஹன் என்பதன் திரிபாகக் கூறுவர். ஸம்க என்னுஞ் சொற்கு உடன் செல்லுதல் அல்லது ஒன்று சேர்தல் கூடுதல் என்பதே பொருள்.

கும்முதல் = கூடுதல் குவிதல். கும்—கும்மல் (குவியல்)—L. *cumulus*, heap. உம்—கும்—கும்பு—கும்பல்.

கும்மலிடு—L. cumulate.

கும்—L. *cum*—E. cum, com

L. cum (கும்)—Gk, sum (ஸூம்)—Skk, sam (ஸம்) = உடன், கூட E. sym.

ஏ (ஏகு)—யா—இ. ஜா, கா (gā); E. go, Skk *gam*, to go

Skt gam—ga, *samga*, to go together, to unite,

Samgha = combination, collection, assembly, association, soicety.

இதனால், சங்கம் (ஸம்க) என்னும் வடசொல்லும் தென் சொல்லின் திரிபே என்று தெரிந்துகொள்க. ஆகவே, கழகம் என்னும் சொல்லே இருமடிப் பொருத்தமாகும்.

**உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாட்டின் பயன்பாடு**

இதுவரை நடைபெற்ற நான்கு மாநாடுகளாலும் தமிழுக்குக் கேடேயன்றி, ஒரு நலமும் விளைந்ததில்லை. அவற்றை நடத்தி வருவது ஒரு வையாபுரிக்குழு. எனக்கும் என் போன்றார்க்கும் ஓர் அறிவிப்புக் கூட இல்லை. எனக்கே அழைப்பும் அறிவிப்பும் இல்லாவிடின், என்னினும் பன்மடங்கு அறிவும் ஆற்றலும் பெற்ற மறைமலையடிகள் இன்று இருந்திருப்பாராயின், அவருக்கு எங்ஙனம் அழைப்பு விடுத்திருப்பர்? அவருக்கு அழைப்பில்லாத உலகத் தமிழ் மாநாடொன்று இவ்வுலகில் நடைபெறுமாயின், அது எத்தகையதா யிருக்கக்கூடும்?

தமிழ் நாட்டில் நடைபெறும் மாநாடுகட்கே எனக்கு அழைப்பு வந்தது. அதுவும், முந்தின மாநாட்டில் மாண்புமிகு அண்ணாத் துரையாலும், இம் மாநாட்டில் மாண்புமிகு மா. கோ. இரா. வாலுமே எனக்குக் கிட்டிற்று.

உலகத் தமிழ் மாநாடுகள் தோன்றுமுன் சிந்துவெளி நாகரிகம் திரவிடரதென்று பின்னிய இரசிய ஆராய்ச்சி யறிஞரால் தீர்க்கப்பட்டிருந்தது. பின்போ, அம் முடிபு வன்மையாக மறுக்கப் பட்டு வருகின்றது.

ஆதலால், மாண்புமிகு அழகமதியாரே (இராமச்சந்திரனாரே இக் குழுவைக் கலைத்து மாநாடு நடத்தும் உரிமையைக் கைப்பற்றி, மதுரையில் நிறுவவிருக்கும் தமிழ்க் கழகத்தைத் துணைக் கொண்டே ஐயாட்டை யிறுதி உலகத் தமிழ் மாநாடுகளை ஒழுங்காக நடத்தி வருவாராக.

———

# அகரமுதல் எழுத்து ஆறுலட்சம்

## (திருக்குறள் தெளிவுரை)

மேல் நாட்டுக்காரர் ஒருவருக்கு ஆயிரத்தெண்ணூறு வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த தமிழர்களைப்பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டதாம். இது சம்பந்தமாக ஏதாவது புத்தகம் கிடைக்குமா என்று தேடிப்பார்த்தார். பேராசிரியர் வி. கனகசபை என்பவர் எழுதிய '1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்' என்ற பழைய புத்தகம் ஒன்று கிடைத்தது இதை விட்டால் வேறு கிடைக்காது என்று எண்ணி 600 ரூபாய் கொடுத்து அந்தப் புத்தகத்தை வாங்கிக்கொண்டார். ஆனால், அவருக்குத் தெரியாது, சென்னையிலுள்ள ஒரு புத்தகக்கம்பெனி இதே புத்தகத்தை அழகாக அச்சிட்டுப் பத்து ரூபாய்க்கு விற்பதாக! அந்தப் புத்தகக்கம்பெனிதான் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

கால வெள்ளத்தில் சிக்கி, நம் கைகளில் அகப்படாமல் எங்கெங்கோ சிதறிக்கிடக்கும் சிறந்த தமிழ்நூல்களையெல்லாம் அழகாக அச்சிட்டு, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குச் சேவை செய்து வருகிறது. இந்தக் கழகம்—இன்று நேற்றல்ல—கடந்த ஐம்பது ஆண்டுக்காலமாக. ஆம்; கடந்த செப்டம்பர் மாதத்துடன் இதற்கு ஐம்பது ஆண்டுகள் பூர்த்தியாகிப் பொன்விழாவும் கொண்டாடியாகி விட்டது.

இதுவரை இந்த நூற்பதிப்புக்கழகம் 1,400 புத்தகங்களை வெளியிட்டிருக்கின்றது. இலக்கியம்—சரித்திரம்—கவிதை—நாடகம்—விஞ்ஞானம்—குழந்தைப் புத்தகம் என்று ஒன்றும் பாக்கியில்லை. இந்தக் கழகத்தினர் வெளியிட்ட 'திருக்குறள் தெளிவுரை' என்ற சிறு நூல் இதுவரை *ஆறு லட்சம் பிரதிகள் விற்பனையாகி இருக்கின்றது. தமிழ்நாடு தெய்வீகப் பேரவையினர் இந்தப் பிரதிகளை வாங்கிப் பட்டமளிப்பு விழாவில் கலந்துகொள்ளும் மாணவர்களுக்குப் பரிசாகத் தருகின்றார்களாம்.

வேலையோ—வருமானமோ இல்லாமல் தவிக்கும் தமிழ்ப் புலவர்களுக்குப் பணஉதவி செய்து, அவர்கள் எழுதித்தரும் இலக்கிய ஆராய்ச்சி நூல்களை இந்தக் கழகத்தினர் வெளியிடுகிறார்கள். பல ஏழைப் புலவர்களுக்கு இது ஒரு நிரந்தர வருமானத்தையும் கொடுத்து வருகிறது. சங்ககாலத்தமிழ் இலக்கியங்களையெல்லாம் அழகாக அச்சிட்டு, பைண்டு செய்து, அவற்றைப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ள அழகான சிறிய ஒரு மர 'ஷெல்பும்' (பேழையும்) தருகிறார்கள். இந்தக் கழகமானது தனது லாபத்தில் பாதியைத்

---

*1971 இல் 6 நூறாயிரம் படிகள் விற்பனையாகியிருந்த திருக்குறள் தெளிவுரை இதுவரை பத்து நூறாயிரம் படிகள் விற்பனையாகியுள்ளன.

தர்ம காரியங்களுக்காக ஒதுக்கி வைத்து, நூல்நிலையங்கள் நடத்துவதுடன், தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடும் சங்கங்களுக்கு நிதி உதவியும் செய்கிறது. பொன்விழாவைக் கொண்டாடிய இந்த நூற்பதிப்புக்கழகம், சிறப்பு வெளியீடாகப் பெரியபுராணத்தைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுகிறது.

இதன் நிர்வாகி திரு. சுப்பையா அவர்களுடைய சிந்தனையெல்லாம் ஒரே ஒரு விஷயத்தில்தானும்—தமிழ் வளர்ச்சிதான் அது!

நன்றி: ஆனந்த விகடன் 31—1—1971

———

## "அணிலார் செய்கை"

[செல்வக்கண்ணன்]

வீட்டு முகப்பில் ஓர் ஓட்டுத் தாழ்வாரம்;
தாழ்வாரக் கைவளைக் கம்பின்மேல்
ஊர்ந்து சென்றதோர் அணிற்குட்டி;
நடக்க அறியா அணிற்குட்டியின்
நடுங்கிய கால்கள் இடற
நழுவி வீழ்ந்து கீச்சிட்டது குட்டி;
சுவரில் மாட்டிய கண்ணாடிச் சட்டத் திடையே
மாட்டிக் கொண்டு கூச்சல் இட்டது;
குட்டியின் குரலை எட்டியிருந்து கேட்டன போலும்;
இடப்பால் இருந்து தாவிவந்தது இனிய தாய்!
வலப்பால் இருந்து முட்டிமோதி முனைப்பாய் வந்தது தந்தை!
இரண்டும் கூடி ஏதோ பேசின;
கண்ணாடிச் சட்டக் கயிற்றுவழியே கடிதில் இறங்கின;
குட்டியை இரண்டும் கூடித் தூக்கிக்
கைவளை மேலே கருத்தாய்ச் சேர்த்தன;
குட்டி துயரம் குலைந்து போயது;
தந்தையும் தாயும் கொஞ்சிக் களித்தன;
இன்னதே அன்றோ குடும்பப் பண்பு!
குட்டி குரல்தரப் பெட்டையும் ஆணும்
பின்னிப் பிணைந்து பெருகிய அன்பால்
உதவுதல் தானே உயர்ந்த குடும்பப் பாங்கு!
துடிப்போர் தங்கள் துயர்க்குரல் கேட்டுத்
துடித்துவந்து உதவுதல் தானே,
உலகக் குடும்பம் உய்தற்காம் வழியே!
அணிலார் செய்கை அறிஞர் செய்கையாய்
அமைதல் ஆகாதோ?

# வண்ணச்சரபர் வழங்கிய வண்ணவகைகள்

[புலவர். தி. மு. சங்கரலிங்கம், திருவாமாத்தூர்]

## தோகை :

திருநெல்லைப் பதிமுருக தாசதண்ட பாணி
திருப்புகழோன் என்றும், வண்ணச் சரபமென்றும், திகழ்வார்
திருவருணைப் பதியருண கிரிமுனிவர் கலையாய்ச்
செகத்துதித்த உண்மைசெவ்வேள் செப்பஅறிந் துரைத்தார்
வருமந்த வாய்மையினல் வண்ணமெனப் பகர
மன்னுசந்தப் பெருங்கவிகள் வகுத்தனர்பற் பலவே
திருவுருமா மலை, பழனி, திருவரங்கம், சென்னை
திருச்செந்தூர், தேவை, யெனத் திகழ்தலமூர்த் திகட்கே. 1

## வகை :

ஆண்டவனே டடிமைபெறும் பேரின்பக் கலப்பை
அணிக்''கலவி மகிழ்தலெ''ன்றும், அவனுருவை யெழுதிக்
காண்டலரி தெனலை''அவ யவமெழுதல் அரிதாம்''
கவினதென்றும், மனமுலகிற் கவின்மயலி லழுந்தல்
தூண்டவரும் 'சுரம் போக்குத் துறை'யென்றும், தொடங்கும்
தூயதவத் தாலவிரும் அனுபவத்தில் மகிழ்ந்து
நீண்டமுயற் சியைவிடுத்த துயரினைக்கண் டழுங்கும்
நிலையினைப்''பா லனைப்பழித்தல்'' நெறித்துறையாம் என்றும் 2

தலைவனும் இறைவனொடு சாராமல் மனது
தடுமாறும் நெறிநீங்கித் தலைவனொடு தங்கும்
நிலைவேண்டு வதைத்''தலைவன் பாங்கிமுனம் விரும்பி
நிகழ்த்தலெ''ன்றும் துறைவகுத்து நீண்டவண்ணப் பாவால்
கலைவல்லார் புகழ்ந்துவப்ப எளியநடை யதனிற்
கருத்தாழம் சொல்லழகு கனியவிரைந் தெழுதி
விலையில்மணி யெனத்திகழும் உயர்வறிந்தே அந்நாள்
வியன்வண்ணச் சரபமென விளம்பினர்பா வலரே. 3

சந்தமலி திருப்புகழ்கள், சந்தவிருத் தங்கள்
சாற்றறுபத் தாறுகலை சார்ந்திடும்வண் பாடல்
இந்தவுல கத்தெவரும் இதுவரைகூ றுத
இயல்பினிற்பே ரொலியல்முத லொலியலந்தா தியெனு
முந்தவுரைத் தொரேதடவை யினிற்பாடி முடித்து
முன்னுபனை யேட்டிலெழு தியும்வைத்த பெருமைக்(கு)
எந்தவிதத் தினும்தண்ட பாணிமுனிக் கிணையா
எவருமிலை யிஃதுறுதி இறைவனறி வானே. 4

---

# தமிழிலக்கியத்தில் சிறுமீன்

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

*"தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை*
*தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்*
*நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை*
*அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு*
*மன்னர்க் கிருக்க நிழலா கும்மே".* —வெற்றிவேற்கை—17

தெளிந்த நீருடைய குளத்தில் வாழும் சிறிய மீனின் முட்டையைவிட ஆலின் சிறிய வித்திலிருந்து தோன்றிய மரமானது நிழலைத்தரும் என்று அதிவீரராம பாண்டியன் பாடியுள்ளான். ஆலமரம் விழுதுவிட்டுப் பரவிப் பல்லாண்டுகள் வாழ்ந்து நிழல்தருவது கண்கூடாகக் காண்பதாகும். அடையாறு கலாச்சேத்திரத்தில் பெரிய ஆலமரம் பல விழுதுகளை விட்டு விளங்குகின்றது. கல்கத்தாவில் இந்திய அரசின் பாதுகாப்பில் உள்ள பூங்காவில் (Botanical Garden) ஏறக்குறைய ஒரு மைல் சதுரப்பரப்புள்ள வியப்புக்குரிய தொன்மையான ஆலமரம் உள்ளது. அடிமரம் பட்டுப்போகியும் விழுதுகள் மரத்தைத் தாங்கிக்கொண்டு உள்ளன.

*"முழுமுதல் தொலைத்த கோளி யாலத்துக்*
*கொழுநிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு"*
—புறம்-53

என்று புறநானூற்றுப் பாடலிலும் விழுதுகள் அடிமரம் அழிந்த ஆலமரத்தைத் தாங்குவதுபற்றிக் கூறப்பட்டுளளது.

சிறுமீன் என்பதற்குப் பொதுவாகச் சிறியமீன் என்றே பொருள்கொள்வது புலவர்கள் வழக்கமாகும். ஆனால், நுண்ணிதின் ஆராய்ந்தால் சிறுமீன் என்பது ஒரு குறிப்பிட்ட தனிப்பட்ட மீன் வகையைக் குறித்ததாகும் என்பதை அறியவேண்டும். சங்க நூல்களில் பெருமீன், கொழுமீன் என்று வரும் பெயர்கள் பொதுப் பெயராகவும் சிறப்புப் பெயராகவும் வழங்கியதை எனது 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலிலும், 'சங்க நூல்களில் மீன்கள்' என்ற நூலிலும் விளக்கியுள்ளேன். பெருமீன் எப்படித் திமிங்கிலத்தைக் குறித்தது என்பதையும் விளக்கியுள்ளேன். ஆனால், அண்மையில் வெளிவந்த நெய்தற்றிணையைப் பற்றி எழுதிய ஆராய்ச்சி நூலில் இந்தியக்

கடல்களில் திமிங்கிலமே கிடையாது என்று ஒரு புலவர் மறுத்துக்கூறியுள்ளார். விலங்கு நூலறிவும் கடலுயிர்களைப்பற்றிய அனுபவ அறிவும் இல்லாமையால் இவ்வாறு எழுதுகிறார்.

இதைப்பற்றி விளக்கமாகப் பின்னர் எழுதுவேன். பெருமரம், சிறுமரம் ஆகியவை பொதுப்பெயராகவும் சிறப்புப் பெயராகவும் வழங்கியதைச் செல்விக் கட்டுரைகளில் விளக்கியுள்ளேன். 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்று தாமரைப் பூவைப்பற்றிக் கூறுவதையும் காணலாம். உலவை என்ற பெயரும் பொதுப் பெயராகவும் சிறப்புப் பெயராகவும் வழங்கியுள்ளது. ஒரே சொல்லைப் பொதுப்பெயராகவும் சிறப்புப் பெயராகவும் பயன்படுத்தும் மரபுகள் சங்க காலத்திலிருந்தே வந்திருக்கின்றன.

வெற்றிவேற்கைப் பாட்டில் சிறுமீன் என்ற பெயர் சிறப்புப் பெயராக வழங்கினதேயன்றிப் பொதுப்பெயராக வழங்கவில்லை. இந்தச் சிறுமீன், தனித் தன்மையான மீனாகும். இன்றும் ஏரி, குளம், நெல்வயல் நீர் ஆகியவற்றில் காணப்படுகின்றது. இந்த மீனின் நீளம் ஏறக்குறைய 3·8 மில்லிமீட்டர் ஆகும். சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள பல செய்திகளுக்குப் பொருத்தமான விளக்கம் கூறவேண்டுமாயின் களப்பணியாலும் ஆராய்ச்சியாலும் (Field study and research) கண்டறிந்த பட்டறிவு இன்றியமையாததாகும். பலர் நூலையும் உரையையும் படித்து அந்த உரைக்கும் தேவையில்லாத, சுவையில்லாத விளக்கத்தை எழுதி அரைத்த மாவையே அரைத்து ஆராய்ச்சி நூலாக வெளியிடுவதைப் பார்க்கிறோம். நூலறிவும் பட்டறிவும் காட்சியறிவும் இல்லாவிட்டால் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள அறிவியற்செய்திகளைப் புரிந்துகொள்ள முடியாது. மலையாளப் பேச்சுமொழியில் மீன்களின் பெயர்களை நான் ஆராய்ந்தபோது கண்ணிக்குறியன் என்றதொரு சிறிய மீனை நேரில் பார்த்தேன். கண்ணிக்குறியன் என்ற பெயருக்கு விளக்கம் கேட்டபோது அதற்குரிய விளக்கத்தையும் ஒரு மீனவன் தந்தான். இளம்பச்சை நிறமான இந்த மீனின் வால்துடுப்பில் (Candal fin) ஒரு சிவப்புப் புள்ளியுள்ளது. அது கண்போலக் காணப்படுகின்றது. ஆதலின், 'கண்ணிக்குறியன்' என்று மலையாளத்தில் அழைக்கப்பட்டது. குறியன் என்ற பெயர் சிறியதைக் குறிப்பிடுகின்றது. அங்கயற்கண்ணி என்ற பெயரில் கண்ணி என்ற சொல்லின் பொருளிலேயே மலையாளத்திலும் வழங்கியதைப் பார்க்கலாம். இந்தியாவில் உள்ள மீன்களைக் கண்டு கேட்டு ஆராய்ந்து மிகப்பெரிய நூலை வெளியிட்டுள்ள பிரான்சிசு டே (Francis Day) என்ற பேரறிஞர் இந்த மீனின் கன்னடப் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். குட்டியன் (குற்றியன்) என்ற

கன்னடப் பெயர் சிறிய, குறிய தன்மையைக் குறிப்பிடுகின்றது. ஒரிசா மொழியிலும் இந்த மீனிற்குத் திராவிடப்பெயர் வழங்குவது வியப்பாக உள்ளது. ஒரிசா மொழியில் 'கணக்குறி' என்று வழங்கு கின்றது. இது மலையாளப் பெயரான கண்ணிக்குறியன் என்பது போலவே உள்ளது. குட்டி என்றும் கன்னடப் பெயர்போலவும் ஒரிசாவில் வழங்குகின்றது. 'பச்சை முண்டகண்ணி' என்று தமிழில் அழைக்கின்றனர். இதன் உடலைப் பார்க்கும்போது கண் பெரியதாக உள்ளதால் நாட்டு மக்கள் முண்டக்கண்ணி என்று அழைத்தனர். மலையாளம், கன்னடம், ஒரிசா மொழிகளில் குறுகிய சிறிய மீனிற்குத் தற்பொழுதுள்ள பெயர்களின் பொரு ளிலேயே 'சிறுமீன்' என்ற பெயர் வெற்றிவேற்கையில் வழங்கி யுள்ளதாகக் கருதவேண்டும். சிறுமீனின் அளவு சிறியது. அதனினும் சிறியது அதன் முட்டை. சிறு மீனின் முட்டையின் நீளம் ஒரு மில்லிமீட்டர் என்று அறிவியலார் கண்டுபிடித் துள்ளனர். அதைவிடச் சிறியது ஆலமரத்தின் வித்து. ஆனால், அந்த வித்திலிருந்து தோன்றி அண்ணாந்து பரவி வளரும் மரம் "அணிதேர்ப்புரவி ஆட்பெரும் படையொடு மன்னர்க்கிருக்க நிழல்" ஆகின்றது. ஆலம் என்றால் அகலம் என்று பொருள்தரும்.

சிறுமீன் என்ற பெயரைப் பொதுப் பெயராகக்கொண்டு கூறும்பொருளைவிடச் சிறுமீன் சிறப்பாக ஒரு குறிப்பிட்ட மீனைக் குறித்தது என்றும் தெரிந்துகொண்டால் அதைவிடச் சிறிய அதன் முட்டையும் அதைவிடச் சிறிய ஆலம் வித்தும் அந்த வித்தி லிருந்து வளர்ந்த பெரிய ஆலமரமும் என்ற நயம் சிறந்த விளக்க மாகக் கிடைக்கின்றது. மலையாள மொழியில் ஆலமரத்தைப் 'பேரால்' என்று அழைப்பர். அதிவீரராம பாண்டியன் காலத்தில் சிறுமீன் என்ற பெயர் குறிப்பிட்ட தனிப்பட்ட மீனின் பெயராக வழங்கியிருக்கின்றது. சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் 'குறுமீன்' என்பது ஒருவகை மீன் என்று குறிப்பிட்டிருந்தாலும் எந்தவகை மீன் என்று குறிப்பிடவில்லை. வின்சுலோ அகராதியில் உள்ள இப் பெயர் அவர் காலத்தில் சிறுமீனைக் குறித்திருக்கலாம். சிறுமீனை அறிவியலில் (Hyplochilus melastigme) என்று அழைப்பர். ஆங்கிலத்தில் (Minnow) என்றழைப்பர். இந்த மீனில் ஒருவகை மலையாளத்தில் உள்ளது. அதற்கு வாலில் ஒரு சிவப்புப் புள்ளி உள்ளது. சிறுமீன் இப்பொழுது கொசுவைத் தடுக்கப் பயன்படுகிறது. புதுச்சேரியில் உள்ள கொசுத்தடுப்பு அனைத்திந்திய ஆராய்ச்சி நிலையத்தினர் இந்த மீனைப் பெருக்கிக் கிணறுகளிலும், குளங்களிலும் விடுகிறார்கள். கொசுக்கள் இடும் முட்டைகளை விரும்பி விழுங்குகின்றதால் கொசுத்தடுப்புக்கு (Larvicidal) இந்த மீன் பயன்படுகின்றது. ஒரே நாளில் 200

கொசு முட்டைகளைத் தின்னும் என்று ஆராய்ச்சி அறிஞர் ஒருவர் கூறியுள்ளார். நானே இந்த மீன் கொசுமுட்டைகளைக் கவ்விக் கவ்வித் தின்பதை நேரில் பார்த்துள்ளேன். ஆதலால் சிறுமீன் வெறும் சிறிய மீனன்று. ஒரு தனித்தன்மையுடைய சிறப்பான மீனாகும். உ. வே. சாமிநாதையர் ஒரு சில தனிப்பட்ட மீன்களின் பெயர்களைக் குறிப்பிடுவது போலச் 'சிறுமீன்' என்ற பெயர் 'ஒரு மீன் விசேடமாகும்'. இதை உணராது பொருள்கூறுவது சிறப்பற்றது. இந்த மீனைக் குறவை மீன் விரும்பி உண்ணும் என்றும் கண்டுபிடித்துள்ளார்கள்.

மேற்கோள் நூல்கள் :

1. The Fishes of India—Francis Day

2. Bulletin of the Vector Central Research Institute, Pondichery 1978 -1979.

———

## பெருங் குறைபாட்டினைக் களைந்துவிட்டேம்

"தமிழுக்கு ஆக்கமாக எழுதப்படும் நூல்களில், வட சொற்களைக் கலந்தெழுதுதல் ஒரு பெருங் குறைபாடாகக் காணப்படுதலின், முதற் பதிப்பில் ஆங்காங்கு விரவிய சிற்சில வட சொற்களையும் களைந்து, அவற்றிற்கு ஒத்த தூய தமிழ்ச் சொற்களையே பெய்து இதனை அமைத்திருக்கின்றேம்.

—மறைமலையடிகள்

(1933இல் வெளிவந்த 'சாகுந்தல நாடகம்' 2ஆம் பதிப்பில் குறிப்பிட்டுள்ள கருத்து.)

# இராசேந்திர சோழ விண்ணகரம்

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்,

இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை) திருநெல்வேலி.]

"கோதை மாதவி கொழுங்கொடி யெடுப்பக்
காவும் கானமும் கடிமல ரேந்தத்
தென்னவன் பொதிகையினைத்"

தன்னகத்தே கொண்ட அம்பாசமுத்திரத்தினின்றும் 5 கி. மீ. தொலைவில் மன்னார்கோயில் என்னும் சிற்றூர் உள்ளது. அங்கு மலர்மகளும் மண்மகளும் இருமருங்கு இருப்ப, திருவுக்கும் திருவாம் திருமால் வேதநாராயணனாகக் காட்சியளிக்கிறார். மேலும் பறவையேறும் பரமபுருடன் பரமபதநாதனாகவும், பள்ளி கொண்ட பெருமானாகவும் எழுந்தருளியுள்ளார்.

## புராண வரலாறு

தானவர்கள் இழைக்கும் துன்பம் தாங்காது வானவர்கள் காத்தற் கடவுளாம் கார்மேகச் செங்கண்ணனிடம் முறையிடு கின்றனர். அதனைப் பொறாத அண்ணல் அசுரர்களுக்கு அடைக் கலம் அளித்த பிருகுமுனிவரின் மனைவியான கியாதியைத் தம் சக்கராயுதத்தால் வெட்டிவிடுகிறார். மனைவியை இழந்துவிட்ட பிருகு கோபத்தில் "நான் என் மனைவியை இழந்து தவிப்பதைப் போன்று பரந்தாமனும் பூவுலகில் மனிதனாகப் பிறந்து, தம் மனைவியை இழந்து வருத்தமுறல் வேண்டும்" என்று சபிக்கிறார்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது"

என்பதன்றோ வள்ளுவர் வாக்கு! தம் சினம் அடங்கியபின், தாம் பரமனுக்கு இழைத்த தவறினை உணர்ந்து, தம்மை மன்னிக்கு மாறு மாதவனை வேண்டுகிறார். முனிபுங்கவரின் வாக்கு பொய்க்க லாகாது என்பதற்காக, நெடியமால் பூவுலகில் இராமனாகப் பிறந்து, தம் மனைவியான சீதா தேவியைப் பிரிந்து அல்லல் உறுகிறார். இராவணனை அழித்த பிறகு அயோத்திக்குத் திரும்பிச் செல்லும் வழியில், பிருகுமுனி வேண்டிக்கொண்டதற்கிணங்க, காகுத்தன் அவருக்குக் காட்சியளிக்கிறார். பிருகுமுனிவரும் வேதநாராய

ணனைப் பொதிகை மலைச் சாரலிலே நிலைபெறச் செய்து, தம் பேரனாகிய மார்க்கண்டனுடன் பூசை செய்து வந்தார்.

**சமய வரலாறு**

"பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்" என்று உலக வழக்காகச் சொல்லுவார்கள். தாம் பெற்ற பிள்ளையிடத்துத் தாய் தந்தையருக்கு உள்ள அன்பு அளவிடற்கரியது என்பதைத்தான் இது குறிக்கிறது. இறைவன் உயிர்களிடத்து எல்லையற்ற அன்பைக் காட்ட வேண்டும் என்ற பெருநோக்குடன்தான் திருஅருட்செல்வர்கள் இறைவனைத் தந்தையாகவும், தாயாகவும் போற்றிப் பாடிப் பரவியுள்ளனர்.

*"தடித்தவோர் மகனைத் தந்தையீண் டடித்தால்*
*தாயுட னணைப்பள்தா யடித்தாற்*
*பிடித்தொரு தந்தை யணைப்பனிங் கெனக்குப்*
*பேசிய தந்தையுந் தாயும்*
*பொடித்திரு மேனி அம்பலத் தாடும்*
*புனிதநீ ஆதலால் என்னை*
*அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்*
*அம்மையப் பாவினி யாற்றேன்"*

என்பது திருஅருட்பிரகாச வள்ளலார் திருவாக்கு. தந்தையின் அன்பு, தாயின் அன்பு, எத்தகையன என்பதுபற்றித் தம் திருமொழிகளில் அகம் நெக்குருகும் வண்ணம் உணர வைக்கிறார் குலசேகரப் பெருமாள். எடுத்துக்காட்டாக,

*"முழுதம் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்*
*முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்*
*எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற் கெள்கு*
*நிலையும்வெண் தயிர் தோய்ந்த செவ் வாயும்*
*அழுகை யுமஞ்சி நோக்குமந் நோக்கும்*
*அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்*
*தொழுகை யுமிவை கண்டவ சோதை*
*தொல்லை யின்பத் திறுதிகண் டாளே"*

எனத் தேவகி யசோதை அடைந்த இன்பத்தின் எல்லையைத் தான் அடையக் கொடுத்துவைக்கவில்லை என்று தன் மனத் தாங்கலைக் காட்டுவதன் மூலம் தன் சேய்மீது கொண்ட ஆராக் காதலை வெளியிடுகிறாள்.

"பொருந்தார்கை வேல்நுதிபோல் பரல்பாய
மெல்லடிகள் குருதி சோர
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்பப்
வெம்பசிநோய் கூர இன்று
பெரும்பா வியேன்மகனே போகின்றாய்
கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன்
என்செய்கே னந்தோ யானே"

எனத் தசரதன் தன் மனத்துயரை வெளியிடுவதன் வாயிலாகத் தன் அன்பின் ஆழத்தைத் தெரிய வைக்கிறான்.

பாற்கடலில் பள்ளிகொண்ட பத்பநாபனின் கலியாண குணங்களில் ஆழ்ந்து தம்மையே மறந்து, உள்ளம் உருக்கும் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்த ஆழ்வார்கள் பன்னிருவரில் சேரர் மரபினைச் சார்ந்தவர் பெருமாள் எனச் சிறப்பாகக் கொண்டாடப் படுவர்; வைணவப்பதிகளின் கருவறையின் வாயிற்படிகள் தம் பெயரால் 'குலசேகரன் படி' என அழைக்கப்பெறும் பேற்றினைப் பெற்றவரான குலசேகரஆழ்வார் பரமபதப்பேறு பெற்ற பதி இது.

"தரு துயரம் தடாயேல்" எனத் தொடங்கும் தமது ஐந்தாம் திருமொழியில் வித்துவக் கோட்டத்து அமர்ந்துறையும் விமலனை மங்களாசாசனம் செய்துள்ளார். வித்துவக்கோடு என்பது மலை நாட்டுத் திருப்பதிகளில் ஒன்று என்று கருதுவர் பலர். கருவூரில் உள்ள திருமால் கோட்டத்தைச் சுற்றியுள்ள பகுதிக்கு வித்துவக் கோட்டு அக்கிரகாரம் என்ற பெயர் உள்ளது. எனவே அதுதான் வித்துவக்கோடு என்பது அறிஞர் சிலர் கருத்து. வேறு சிலர் வித்துவக்கோடு என்பது மன்னார்கோயில் என்ற கருத்தைத் தெரிவித்துள்ளனர். இதுபற்றி ஒரு முடிந்த முடிவு காணவில்லை.

திரு. எல். டி. சுவாமிக்கண்ணுபிள்ளை தம் ஆராய்ச்சியால் கி. பி 767 முதல் 834க்கு இடைப்பட்ட காலத்தில் இவரது பிறப்பு இருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வந்துள்ளார். இந்தக் கோயிலில் இவருக்கெனத் தனியாகக் கோயிலும், கொடிமரமும் உள்ளன. இவரால் பூசிக்கப்பெற்ற இராமர் செப்புப்படிமம் அர்த்த மண்டபத்திலும், இராசகோபாலன் செப்புப்படிமம் மகாமண்டபத்திலும் காணப்படுகின்றன.

**கோயில்**

இந்தக் கோயில் இரண்டு திருச்சுற்றுக்களை உடையது. எனவே, இதைப் பிற்பட்ட அல்லது இடைநிலைப்பட்ட கோயிலாகக்

கொள்ள வேண்டும். கோயில் வாயில 5 அடுக்குகள் கொண்ட கோபுரம் அணி செய்கிறது. மேலும் அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம் ஆகியவற்றையும் இக் கோயில் கொண் டுள்ளது. கருவறையைச் சுற்றியுள்ள புரைகளில் கல் வடிவங்கள் கிடையா. தொண்டைநாடு, சோழநாடு ஆகியவற்றிலுள்ள கோயில்களில் கருவறையைச் சுற்றியுள்ள புரைகளில் கல்வடி வங்கள் அமைக்கப்படுவதுபோன்று பாண்டி நாட்டுக் கோயில் களின் கருவறையைச் சுற்றியுள்ள புரைகளில் கல் வடிவங்கள் அமைப்பது இல்லை எனத் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் அவர்கள் தமது "இடைக்காலச் சோழர் கலை" என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

கருவறை மூன்று அடுக்குகளைக் கொண்டது. கீழ்த்தளத்தில் வேதநாராயணன் திருமகள், நிலமகளுடன் நின்ற நிலையில் காட்சியளிக்கிறார். பின் இடக் கையில் சங்கும், பின் வலக்கையில் சக்கரமும் காணப்படுகின்றன. முன் வலக்கை அபயமுத்திரையுடன் உள்ளது. முன் வலக்கை கதைமேல் வைத்த நிலையில் உள்ளது. ஆனால் கதை இல்லை. கருவறையின் பின் சுவரில் மூலவர் தம் இரு தேவியருடன் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளார். தென்புறச் சுவரில் அயனும், வடபுறச் சுவரில் சிவபெருமானும் சித்திரிக்கப் பட்டுள்ளனர். கருவறையை அடுத்த சுற்றுவழி அடைக்கப் பட்டுள்ளது.

இரண்டாவது தளத்தில் பரமபதநாதன் மலர்மடந்தை, மண்மடந்தையுடன் வீற்றிருக்கும் நிலையில் காட்சி அளிக்கிறார். பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் சங்கும் உள்ளன. முன் வலக்கையால் அபயம் அளிக்கிறார். ஒருகால் மடங்கி ஆசனத்தின் மேலும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும் உள்ளன. அஃதாவது அண்ணல் சுகாசனத்தில் வீற்றிருக்கிறார். மார்க்கண்டேயரும், பிருகுமுனிவரும் இருமருங்கும் உட்கார்ந்த நிலையில் காணப்படுகின்றனர். கருவறையின் பின் சுவரில் மூலவரின் வடிவம் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது. தென்புறச் சுவரில் அயனும், வடபுறச் சுவரில் சிவபெருமானும் சித்திரிக்கப் பட்டுள்ளனர். கருவறைக்கு முன் அர்த்த மண்டபம் உள்ளது. கருவறையைச் சுற்றியுள்ள வழி யாரும் தாராளமாகச் செல்லும் படியாக அகலமாக இருப்பதால் "யானை முடுக்கு" என்று அழைக்கப்பெறுகிறது.

மேல் தளத்தில் திருமால் தமக்கே உரிய பள்ளிகொண்ட நிலையில் காணப்படுகிறார். மாயவனது உந்திக்கமலத்தில்

நான்முகனும், அருகில் மலர்மகள் மற்றும் மண்மகள் ஆகியோரும் உள்ளனர். தென்புறச் சுவரில் நான்முகனும் வடபுறச் சுவரில் சிவபெருமான், முப்புரம் எரித்த வடிவிலும் ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளனர். கருவறைக்குமுன் அர்த்த மண்டபம் உள்ளது. கருவறையைச் சுற்றியுள்ள வழி மிகவும் குறுகலாக உள்ளதால் "பூனை முடுக்கு" எனக் கூறப்பெறுகிறது.

திருமாலின் வடிவு யோகமூர்த்தி, போகமூர்த்தி, வீரமூர்த்தி மற்றும் அபிசாரிகமூர்த்தி என நான்கு வகைப்படும். இங்குள்ள சங்குடையான் திருமகள் மற்றும் நிலமகளுடன் காட்சி தருவதால், இவை போகமூர்த்திகளாகும். இந்தக் கோயிலில் நின்ற திருக் கோலம், வீற்றிருந்த திருக்கோலம், மற்றும் கிடந்த திருக்கோலம் ஆகிய மூன்று நிலைகளிலும் காரார் வண்ணன் காணப்படுகின்றான். மேலும் மாயவன் வடிவங்களைச் சுற்றியுள்ள தேவர்கள், முனிவர்கள் ஆகியோரின் எண்ணிக்கையின் அடிப்படையில் முதல் நிலை, இடைநிலை, கடைநிலை என மூன்று பிரிவுகளாகப் பகுக்கின்றனர். இங்குள்ள மூலவர்களைச் சுற்றி, குறைந்த எண்ணிக்கையுள்ள தேவர்கள், முனிவர்கள் காணப்படுவதால், இவை கடைநிலை வகுப்பைச் சார்ந்தவையாம். மேலும் இங்குள்ள மூலவடிவங்கள் எல்லாம் சுதையால் செய்யப்பட்டவையாம். எனவே அபிடேகம் செய்வது இல்லை. தெய்வத் திருமேனிகள் சுதையால் செய்யப் பெற்றவை என்பதினின்றும் இக் கோயிலின் பழைமையை நன்கு அறிந்துகொள்ளலாம்.

விமானத்தின் நான்கு புறங்களிலும் அண்ணலின் வாகன மாம் கருடன் காணப்படுகின்றான். தென்புறத்தில் யோக தட்சிணாமூர்த்தியும், மேல்புறத்தில் யோக நரசிம்மரும், வடபுறத்தில் நான்முகனும் அமைக்கப்பட்டுள்ளனர். சைவக்கோயிலாயினும் சரி, வைணவக்கோயிலாயினும் சரி, விமானத்தின் தென்புறத்தில் தட்சிணாமூர்த்தியும், மேல் புறத்தில் யோக நரசிம்மரும் அமைப்பது அக்கால மரபாக இருந்துவந்தது. இது சைவ வைணவ வேறுபாடு இல்லை என்பதை எடுத்துக்காட்டுகிறது.

## கல்வெட்டுகள்

இந்தக்கோயிலில் 9 கல்வெட்டுகள் உள்ளனவாம். அவற்றில் ஐந்து சடாவர்மன் சுந்தரசோழபாண்டியன் காலத்தவை. அவற்றில் 4 கல்வெட்டுகள் அவனுடைய, 4, 13, 14, மற்றும் 16ஆம் ஆட்சி ஆண்டுகளில் பொறிக்கப்பட்டவையாம். ஒரு கல்வெட்டில் ஆட்சி ஆண்டு சிதைந்துவிட்டது சுந்தரசோழன் என்பான் கங்கையும்

கடாரமும் கொண்ட முதல் இராசேந்திரசோழனின் மக்களில் ஒருவன். பாண்டிய நாட்டில் சோழப்பேரரசின் பிரதிநிதியாக ஆண்டவர்கள் பாண்டிய மன்னர்களைப்போன்று சடாவர்மன் மாறவர்மன் என்ற பட்டப்பெயர்களுடன் விளங்கினர். அவர்கள் தங்கள் பெயருடன் பாண்டியன் என்றும் சேர்த்துக்கொண்டனர். இம் முறையைப் பின்பற்றி, சுந்தரசோழனும் தன்னைச் சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியன் என்று அழைத்துக்கொண்டான். முதலாம் இராசேந் திரனின் 24ஆவது ஆட்சி ஆண்டில் வெட்டப்பெற்ற கல் வெட்டினின்றும் இக் கோயிலைச்சேரமன்னன் இராசசிம்மன் கட்டினான் என்று தெரிகிறது. சோழப்பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசனான அவன் தன் பேரரசன் இராசேந்திர சோழன் பெயரால் இந்தக் கோயிலை 'இராசேந்திர சோழ விண்ணகரம்' எனப் பெயரிட்டு அழைத்தான். இராசேந்திர சோழன் கி. பி. 1012 முதல் 1044 வரை ஆட்சிபுரிந்துள்ளான். எனவே இந்தக் கோயில் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கட்டப்பட்டதாம். பிற் காலத்தில் கோலோச்சிய பாண்டிய மற்றும் நாயக்க மன்னர்கள் பல மண்டபங்களைக் கட்டியுள்ளனர்.

———

## உணர்ச்சி இல்லை!

நாம் அரிய செல்வங்களை வெளியில் காட்டாமல் வைத்துக்கொண்டிருக்கிறோம். இதற்கு அடிப்படைக் காரணம், தமிழ் தெரிந்தவர்களுக்கு ஆங்கிலம் தெரியவில்லை; ஆங்கிலந் தெரிந்தவர்களுக்குத் தமிழ் தெரியவில்லை; இரண்டும் தெரிந்தவர்களுக்குச் சைவ சித்தாந்தம் தெரியவில்லை; மூன்றும் தெரிந்தவர்களுக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு கிடைப்பதில்லை; அப்படித் தப்பித் தவறிப் போனாலும் இதைப் பரப்ப வேண்டும் என்னும் உணர்ச்சி இல்லை!

முனைவர், முத்தமிழ்க் காவலர்
கி. ஆ. பெ. விசுவநாதம்

(தருமையாதீனக் குருபூசை விழாவில் பேசியது)

## முன்னாள் தமிழக முதல்வர் உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்களின் பாராட்டுரை

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் 60 ஆண்டுகளாகச் சிறந்த பணிபுரிந்து வந்திருக்கிறது. கழகத்தின் திருப்பெயர் நல்லதொரு பெயர்தான். ஆனால், இந்தக் கழகம் சாதித்திருக்கிற அபார சாதனைகளைக் காணும்போது சைவசித்தாந்தத்திற்கும் அப்பால் பலதுறைகளில் கவனம் செலுத்தி அரிய நூல்கள் பலவற்றைப் பிரசுரித்து அபாரமான சாதனை சாதித்திருக்கிறது என்பதுபற்றிக் கழகம் பெருமிதம் அடையக்கூடும். இந்தச் சாதனை தமிழ்வளர்ச்சியிலேயே பெரியதொரு அம்சமாகும்.

இக் கழகத்தைத் தொடங்கியவர் திரு. வ. சு. அவர்களின் தமையனார் திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் ஆவர். 1944 இல் அவர்களுக்குப்பின் இப்போது ஆட்சியாளராக இருக்கும் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கு 84வயதாகிறது. சைவசித்தாந்தக் கழகத்தின் ஆயுட்காலமே பிள்ளை அவர்கள் தமிழ்ச்சேவையின் காலமாகும். 1700க்குமேல் பலதரப்பட்ட பெரும்பயன் தரக்கூடிய நூல்கள் வெளிவந்திருக்கின்றன. இந்தப் பட்டியலைக் காணும் எவரும் தமிழ் வளர்ச்சியினைப் பற்றிப் பெருமிதம் அடையாமல் இருக்க முடியாது.

பல்லாண்டுகட்கு முன்பு எனக்கும் ஒரு குறை இருந்தது. திறனாய்வுக்கு உரிய ஆராய்ச்சி நூல்கள் பல தமிழில் வெளிவரவில்லையே என்று நான் ஏங்கியதுண்டு. ஆனால், இப்போது அந்தக் குறை நீங்கிவிட்டதென்று கூறலாம். தமிழ்நூல்கள் வேண்டுமென்று சென்னை நகரிலுள்ள புத்தகக்கடைகளிலெல்லாம் தேடித்தேடிப் பார்த்து எங்கும் கிடைக்காமல் ஏமாற்றம் அடைந்தது எனக்கு நினைவுக்கு வருகின்றது. ஆனால் அந்தக் குறையைக் கழகம் நீக்கியிருக்கிறது. இப்பொழுது என் அவாவெல்லாம் தமிழர்கள் கழகம் வெளியிடுகின்ற அரிய நூல்களை வாங்கிப் படித்து இன்புற வேண்டுமென்பதே. தமிழன்பர்களுக்கு நான் ஒரு யோசனை கூறுவேன். "தங்கள் இல்லத்தில் ஏன் ஒரு தமிழ் நூலகம் வைத்துக்கொள்ளக்கூடாது"? என்பதுதான் அது.

தமிழ்நாட்டிலுள்ள நூலகங்களும் கழக நூல்களைத் தவறாமல் வைத்துக்கொள்ள வேண்டுமென்பது என் அவா. இந்த ஆதரவு

மேலும் பல அரிய நூல்களை வெளியிடுவதற்குக் கழகத்திற்குப் பேருதவியாக இருக்கும். கழகத்திற்கும், திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கும் என் பாராட்டுதல்களையும் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தின் நன்முயற்சியினை நன்கு பயன்படுத்திக்கொண்டு அதற்கு ஊக்கமளிக்கும்வகையில் பல்கலைக்கழகங்கள் அக்கறையெடுத்துக் கொள்ளவேண்டுமென்று நான் கோருவேன். தகுதியான கழக நூல்களிற் சிலவற்றைப் பல்கலைக்கழகங்கள் பாடநூல்களாக வைக்கலாம் என்பது என் யோசனை. இந்த ஆதரவை அளிக்கப் பல்கலைக்கழகங்கள் முன் வருமென்றே நான் எதிர்பார்க்கிறேன்.

இந்த மகத்தான பொறுப்பை ஏற்றுக்கொண்டு பணிசெய்து வருகிற கழகத்திற்குப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு வருகிற தென்று நான் தெரிந்துகொண்டு வருவதில் ஆச்சரியப்படவில்லை. உற்சாகத்தோடும், நம்பிக்கையோடும் இந்தப் பணியை ஏற்றுக் கொண்டிருக்கிற கழகத்திற்கு அதன் சிறந்த ஆற்றல் மட்டும் போதாது. திட்டமிட்டு அரிய நூல்களை ஆக்கி வெளியிட்டு வரு கிறது கழகம். அது இன்னும் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு அரசுகளின் உதவியும் வேண்டும். அரசுகளின் ஆதரவு இந்த நற்பணிக்கு மேலும் மேலும் அதிகரிக்க வேண்டுமென்று எதிர் பார்க்கும்போது அந்த ஆதரவு குன்றி வருகின்றது என்பதைக் கேட்க நான் ஆச்சரியப்படுகிறேன். சில ஆண்டுகளுக்கு முன்பு தமிழக அரசு நல்ல அரிய நூல்கள் வெளியிடப்பெறுவதை ஆதரிக்கும் வகையில் அரிய நூல்களுக்குப் பரிசளித்து வந்தார்கள். அது இப்போது ஏன் நின்றுபோய்விட்டதென்பது தெரியவில்லை. தமிழ்வளர்ச்சித்துறையே ஒன்று நான் அமைச்சராக இருந்தபோது தனியாக அமைக்கப்பட்டது. அந்தத் துறை மேலும் ஆராய்ந்து கழக நூல்களை வெளியிடுவதற்கு உதவியளிக்கும் வகையில் சில திட்டங்களை உருவாக்க வேண்டுமென்பது எனது அவா. அவ் வாறே மொழிவளர்ச்சியில் அக்கறைகொள்ளும் மத்திய அரசும் கழக நூல்கள் பெருகுவதற்கு உதவி மானியம் அளிக்க முன்வர வேண்டும். முன்பு நூல் வெளியிடுவதற்கென்று மான்யம் வழங்கப் பட்டு வந்தது. அது இப்போது நிறுத்தப்பட்டிருக்கிறது. இதை யெல்லாம் மத்திய அரசுக் கல்வித்துறை ஆராய்ந்து கழகத்தின் பணி மேலும் சிறப்புற நடைபெறும் வகையில் மான்யம் அளிக்க முன்வரவேண்டுமென்று நான் எதிர்பார்க்கிறேன்.

———

# நரியைக் குதிரை செய்வான்

[நக்கீரன் வழியடிமை. புலவர். பி. மா. சோமசுந்தரனுர்,

இராணிப்பேட்டை]

## 1. முன்னுரை

மணிமொழிப் பெருமான் மண்ணுலகத்தே நிலவிய காலத்தை மறைமலேயடிகளார் தம் திட்பநுட்பம் சான்ற ஆராய்ச்சியால் அறுதியிட்டுள்ளார். ஆயினும் இக்காலேப் புலவர்சிலர் அம் முடிபை முரணித் தம் கருத்தை நிலேயிட முயல்கின்றனர். இஃது அடிகளார் தம் ஆராய்ச்சி வன்மையை அகங்கொளாமையாலோ, கொண்டும் அவர் கண்ட முடிபினும் தாம் கொண்ட முடிபே வலிது என்ற கருத்தாலோ நிகழ்வதாகும். ஒருவர் தம் ஆராய்ச்சியிற் போந்த முடிபு பிழைபடுவதாமேல் அவ்வாராய்ச்சியை முறையுற மறுத்துத் தங்கோள் நிறுவுதலே தக்கார் நெறியாம். அஃதொழிந்து ஆன்ருேர் வழக்கிற்கும் ஆராய்ச்சி முடிபுக்கும் மாருகத் தம் கருத்தையே வலியுறுத்திச் செல்லல் நன்றன்ரும் என்க.

இன்னோர் மணிவாசகர் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியிலோ பிற்பகுதியிலோ திகழ்ந்தவராதல் வேண்டும் என்பர். தம் கருத்து முன்னோர்க்கும் உடம்பாடே என்று இன்னோர் மனப்பால் குடிப்பினும் அது முன்னோர் கொண்ட கொள்கைக்கும் முரண்படுவதே என்பதை இக் கட்டுரையின் ''நரியைக் குதிரை செய்வான்—தொல்லாசிரியர் கண்ட பொருள்'' என்ற பகுதிக்கண் காட்டியுள்ளாம்.

எனவே 'நரியைக் குதிரை செய்வான்' என்ற தொடர்க்கு உண்மைப் பொருள் காண எழுந்ததே இக் கட்டுரை என்றுணர்க.

## 2. அப்பர் பெருமான் திருமொழி

''நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானேமுன் னேட முன்பணிந் தமரர்க ளேத்த
வரவரை சாத்திநின் ருனு மாரூ ரமர்ந்தவம் மானே''

என வருவது ஆளுடை அரசுகள் ஆரூரில் அருளிச் செய்த 'பாடிளம் பூதத்தினனும்' எனத் தொடங்கும் பதிகத்தின் இரண்

டாம் பாடல் ஆகும். இதன்கண் வருஉம் 'நரியைக் குதிரை செய் வானும்' என்ற தொடர் நஞ்சுண்ட நம்பன் நான்மாடக் கூடலில் திருவாதவூரடிகள் பொருட்டு நரியைப் பரியாக்கிய நிகழ்ச்சியைக் குறிப்பதென்பது மரபுவழிவரும் உரை.

ஒம் மரபுரையை மறுப்போருள், தமிழன்னை மூத்து முதுகு வளைந்து வடமொழித் தண்டூன்றி நடக்கத் தலைப்பட்டனளோ என்ற ஐயத்தை எழுப்பும் 'தமிழ் வரலாறு' எழுதிய தஞ்சை சீனிவாசபிள்ளை அவர்களும், 'பன்னிரு திருமுறை வரலாறு' எழுதிய வித்துவான். க. வெள்ளைவாரணன் அவர்களும், 'அப்பர் வரலாற் ருராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்' எழுதிய கவியரசு. கு. நடேச கவுண்டர் அவர்களும் குறிப்பிடத்தக்கோர்.

தமிழ் வரலாறுடையார் அந் நூல் பக்கம் 103இல், இத் தொடர் 'சிவபிரானது அகடிதகடன சத்தியைச் சொல்லுவது' என்று விளக்கினர். இதன்கண் 'அகடிதகடன' என்ற அருந்தமிழ்ச் சொல்லை யிட்டு எம்போலியரை மருளவும் வைத்துள்ளார். பன்னிரு திருமுறை வரலாறுடையார் முடிவிலாற்றலுடைமை என்று குறித்து எம்மைத் தெளிவுபடுத்தினராயினர்.

மக்களுள் உள்ளான் ஒருவனின் பேராற்றலைக் கூறும்போதும் 'வானத்தை வில்லாக வளைப்பான்' என்றும் 'மணலைக் கயிருகத் திரிப்பான்' என்றும் கூறுவதே வழக்கு ஆம். "செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும், வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்" (புறம் 38) எனல் காண்க. அப்பர் பெருமான் இவற்றை நொய்ம் மைய எனக் கழித்து நரியைப் பரியாக்குதலே அகடிதகடன சத்தி யெனவோ முடிவிலாற்றலுடைமை எனவோ கொண்டுரைத்தார் எனல் மதிநுட்பம் உடையார் அவைக்கண் மணம் பெருது என மறுக்க.

இனி, பன்னிரு திருமுறை வரலாறுடையார் "நரியைக் குதிரை செய்தல், நரகரைத் தேவுசெய்தல், விரதங்கொண் டாடுதல், விச்சின்றி நாறு செய்தல் என்பவற்றை முன்னொரு காலத்திற் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்களாகத் திரு நாவுக்கரசர் கருதவில்லை யென்பதற்கு இச் செயல்களை இத் திருப் பாடலில் எதிர்காலத்தில் வைத்துக் கூறியருளியதே சிறந்த சான்ருகும்" என்ருர். தமிழ் வரலாறுடையாரும் "செய்தான் என்று இறந்தகாலத்தால் அருளிச் செய்யாது செய்வான் என்று எதிர்காலத்தால் அருளிச் செய்தமையின் அப்பர் பாடல் மாணிக்க வாசகரைக் குறிக்கும் என்று கூறுவது பொருந்தாத கூற்று" என்ருர். 'இறப்பே யெதிர்வே யாயிரு காலமும், சிறப்பத் தோன்று

மயங்குமொழிக் கிளவி' எனவரும் தொல்காப்பிய விதியைப் புறம் போக்கும் இன்னோரை,

''வக்கிர னுயிரை வவ்வக் கண்மலர் கொண்டு போற்றச்
சக்கரங் கொடுப்பர் போலுந் தானவர் தலைவர் போலுந்
துக்கமா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை யார்ப்பர் போலு மாவடு துறைய னாரே''

எனவரும் அப்பர் பாடலுள் நிகழ்ச்சிகள் எதிர்காலத்தில் வைத்துக் கூறப்பட்டிருப்பதால் இந்நாள்வரை சக்கரம் கொடுத்திலர் எனவும் தானவர் தலைவரானாரிலர் எனவும் மூடரைத் துயரில் வீழ்த்திலர் எனவும் அக்கரை ஆர்த்திலர் எனவும் முன்னொருகாலத்தில் சிவபிரான் சக்கரங் கொடுத்த திருவிளையாடலாகக் கருதி அப்பர் இதனை அருளிச் செய்திற்றிலர் எனவும் வழக்கிடுவீரோ எனக் கடாவி மறுக்க. இன்னணமே

''மாயிரு ஞால மெல்லா மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய னாரே''

எனவரும் அப்பர் பெருமான் பாடற்கண் வரும் செய்திகளுக்கும் வினாத் தொடுத்து மறுக்க.

மற்றும் ''நரியைக் குதிரை செய்வான்'' என்ற பாடற்கண் வரும் நரியைக் குதிரை செய்தல் நரகரைத் தேவு செய்தல், விரதங் கொண்டாடல், விச்சின்றி நாறு செய்தல் முதலிய செய்திகளும் இந் நாள் வரை நிகழ்ந்திலபோலும் எனவுங் கடாவுக. இதனால் எதிர் காலத்தில் கூறியது என்று இன்னோர் எழுப்புந் தடை தடையுண்டு வீழ்ந்ததென்க. இதனை நன்குணர்ந்தே கவியரசு அவர்கள் ''முக் காலத்தினும் ஒத்தியல் பொருளை எதிர்காலத்தில் செப்புதல் தமிழ் நூல் மரபு. ஆதலால் செய்தானும் என்னாது செய்வானும் என்று எதிர்காலத்தில் கூறினர்'' என்றோர் அமைதி கண்டார்.

இனி ''நரியைக் குதிரை செய்வானும் என்றது திருவாதவூருக்காக இறைவன் நரியைப் பரியாக்கிய திருவிளையாடலைக் குறிக்காது, நரிபோல் வலிமையற்றவராய்த் தீயவஞ்சகராய் இருப்போரையும் குதிரைபோல வலிவும் அழகும் மதிப்பும் உடையாராகச் செய்யவல்லவன் என்றே பொருள்படும்'' என்பது கவியரசு அவர்கள் விளக்கம். பன்னிருதிருமுறை வரலாறுடையாரும் இதனை ஒத்தே உரைத்தார். இக் கூற்றையும் ஆய்வாம்.

### 3. நரியும் பரியும்

நரி சிறுமைத்து எனில் அரிமா அல்லது புலி பெருமைத்து ஆகும். குதிரையைக் கூறல் சிறப்புமன்று; வழக்குமன்று. நரி அழகற்றது எனில் களிறு அல்லது புலி அழகுடைத்து எனல் வேண்டும். சிறுர் முதல் முதியோர் வரை கண்டு களிப்பது யானையையே யன்றிக் குதிரையை அன்று. நரி மதிப்புடையதன்று எனில் யானையே மதிப்புடையதாகும். யானை இருந்தாலும் ஆயிரம் பொன் இறந்தாலும் ஆயிரம் பொன் என்பரன்றோ ?

நரி வஞ்சகமுடையது எனில் குதிரை குணமுடையதாதலை யாண்டுப் பெற்றீர் என்று வினவுக. கீழேவரும் பழமொழிகளை நினைவு கூர்க.

> "குதிரையின் குணமறிந்துதானே கொம்பு கொடுத்தானில்லை"
> "கொள்என்ருல் வாய்திறக்கும், கடிவாளம் என்ருல் வாய்மூடிக் [கொள்ளும்"
> "குதிரைகீழே தள்ளியதுமல்லாமல் குழியும் பறித்ததாம்"

"ஒருவன் குதிரைமுகன் என்ற புகழுடையான் மற்றொருவன் யானை முகனை பிள்ளையையுடையான் என்ற புகழுடையான் ஆன்றோர்களே ! இவ் விருவரில் சிறந்தவன் யாவன் என்று சொன்னல் நாங்கள் அவனையே புகலடைவோம்" என்று அரதத்த ஆசாரியரின் அரியரதாரதம்மியத்து (57) வருவதும் ஈண்டு எண்ணுக.

இதுகாறும் உணர்த்தியவாற்ருல் நரியைப் பரியாக்கல் எம்பெருமானின் முடிவிலாற்றலைக் குறிக்கும் என்பார் கூற்று குறைபடு மொழியே என்பதும் எலியை மாவலியாக்கிய ஏற்றமும் சிலந்தியைச் செங்கணன் ஆகச் செய்த அருமைப்பாடும் உணராரே இவ்வாறெல்லாம் வலிந்து பொருள் கண்டு புறம் போவர் என்பதும் நன்கு விளங்கும். மேலும்

> "எரியி னரிறை யாரிடு காட்டிடை
> நரியி னர்பரி யாமகிழ் கின்றதோர்
> பெரிய னர்தம் பிறப்பொடு சாதலை
> விரியி னர்தொழும் வீழிம் மிழலையே"

என்னும் திருக்குறுந்தொகைக்கண்ணும் நம் அப்பர் பெருமான் நரிபரியாக்கிய ஆடலைக் குறிப்பிடுவாராயினர். நரியினரைப் பரிந்து மகிழ்கின்றதோர் பெரியனர் எனவே நரியினர் பரிந்து மகிழ்கின்றதோர் பெரியனர் எனவோ எவரேனும் வேறு பொருள் கூற முற்படின் அவ்வாருய நிகழ்ச்சிக்கு உள்ள சான்று காட்டுக என்று கடாவுக. அன்றியும் இஃது அப் பொருளதாமேல்,

நரியினாரின் நல்வினைப் பயன் இத்துணைத்தென இசைத்தற்கு ஒண்ணாதே. ஆயின் நரியைப் பரியாக்கித் தம் முடிவிலாற்ற லுடைமையினை விளக்கும் கடப்பாடுதான் இறைவனுக்கு யாதோ எனவும் வினவுக. இத்தகு நல்வினைப் பயன் வாய்ந்த நரியினாரை இழிமொழிகளால் இன்னோர் ஏசியதும் ஒவ்வுமோ என்றும் வினவுக.

4. ஒப்புமைக் கூட்டத் தொடர்கள்

"'நரியைக் குதிரை செய்வானும்' என்ற "தொடரை வரலாறு குறித்ததாகக் கொள்ளின் ஒப்புமைக் கூட்டமாக இதனுள் அமைந் துள்ளவையாகிய 'நரகரைத் தேவு செய்வான்' முதலியவற்றுக்கும் ஒவ்வொரு வரலாறு வேண்டப்படும். அங்ஙனம் வரலாறு கூறற்கு ஒன்றுமில்லை. 'நரகரைத் தேவு செய்வான்' என்பது பாவிகளையும் புண்ணியராக்கும் இயல்பைக் குறித்தவாறாகும். அதற்கு எடுத்துக் காட்டாகக் கண்ணப்பர் வரலாற்றைக் கூறலாகும். அவரது வரலாற்றை இத்தொடரில் கூறினார் என்றல் சாலாது. 'விச்சின்றி நாறு செய்வான்' என்பது நந்தனார் சரித்திரத்தைக் குறித்ததாகப் பேரறிஞர் ஒருவர் மாணிக்கவாசகர் காலவாராய்ச்சியிற் கூறி யிருப்பது நமக்கு மருட்கை விளைக்கிறது. சேக்கிழாரது பெரிய புராணத்துத் திருநாளைப் போவார் நாயனார் புராணத்திற் கூறப் படாததாகிய விச்சின்றி நாறு செய்த செய்தி கோபாலகிருஷ்ண பாரதியார் யாத்த கற்பனையேயாம். 'விச்சின்றி நாறு செய்வானும்' என்பதன் மெய்ப் பொருளைப் பாம்பன் அடிகளார் அருளிச் செய்த பரிபூரணானந்த போதம் என்னும் நூலில் 41ஆம் செய்யுளின் விளக்கவுரையிற் காண்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்" என்பது கவியரசு அவர்கள் எழுப்பும் தடை. ஒவ்வொரு தொடருக்கும் ஒவ்வொரு வரலாறு வேண்டப்படும் என்பது பன்னிரு திருமுறை வரலாறுடையார்க்கு முடன்பாடே. இவர்தம் கூற்றையும் ஆய்வாம். (தொடரும்)

---

## தவறான மனப்பான்மை

*கடமையைச் செய்யாமலே, கடவுளுக்கு ஏதாவது செய்துவிட்டுத் தப்பித்துக்கொள்ளலாம் என்ற மனப்பான்மை தவறானது என்பதை வற்புறுத்தி உணர்த்தவேண்டும். சமயத் துறையில் தொண்டாற்றுகிறவர்கள் எல்லாரும் மக்களுக்கு இந்தத் தெளிவை உண்டாக்குவார்களானால், அதனால் பெரும் பயன் விளையும்.*

டாக்டர் மு. வரதராசனார்

# தொல்காப்பியம் சுட்டும் இசையியல்

[பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம்

இறையியல் கல்லூரி, மதுரை.]

## 0. தொல்காப்பிய இசையியல் பகுப்பு

தொல்காப்பியத்துள் காணப்படும் இசையியலை நான்காகப் பிரிக்கலாம்.

1. இசையின் காலக் கணக்குகள்—எழுத்து அசை—சீர்—அடி யிவற்றின் அளவுகள் அளவிற்கு ஏற்ப வகைகள்.
2. இசைக் கருவிகள் பண்கள் பற்றிய குறிப்புகள்.
3. சங்க காலத்து இசைப் பாடல் வகைகள்.
4. பாணர்கள் வாழ்க்கைக் குறிப்புகள்.

## 1. பாட்டு தொகை நூலில், சிலம்பில் இசை ஆய்வு

தொல்காப்பியம் சுட்டும் இசையியலின் மரபே, பத்துப் பாட்டு எட்டுத் தொகையிலும் பின் சிலப்பதிகாரத்திலும், அதன்பின் சிலம்பின் சீரிய இருபெரும் உரைகளிலும் வழிவழியாக வளர்ந்து வருகிறது. பத்துப் பாட்டு எட்டுத்தொகையுள் காணப்படும் இசைக்கலைச் செய்திகளை அண்ணமலைப் பல்கலைக் கழக எசு. வயித்தியலிங்கம் தொகுத்துள்ளார் (1977). சிலப்பதிகாரத்தில் காணப்படும் பண்களைப் பற்றிய ஆராய்ச்சியை மு. ஆபிரகாம் பண்டிதர் (1917), விபுலானந்தர் (1947), எஸ். இராமநாதனர் (1956), கு. கோதண்டபாணியார் (1959), அ. இராகவன் (1971), ஆகிய ஐவர் எழுதி வெளியிட்டுள்ளனர். ஆனல், தொல்காப்பியம் கூறும் இசையியலை நெறிமுறையாக இதுகாறும் ஒருவரும் ஆராய்ந்து வெளியிடவில்லை.

## 2. தென்னக இசை வரலாற்றுத் தொடக்கம் தொல்காப்பியத்தில்

எனவே தொல்காப்பியம் காட்டும் இசையியலைப் பல தலைப்பு களில் வரிசையாக, முறைப்படுத்தி முதன்முதல் இக் கட்டுரை வெளியிடுகிறது. வெளியிடும் செந்தமிழ்ச் செல்விக்கு நம் நன்றி. தென்னக இலக்கண நூல்களுள் தொன்மை வாய்ந்தது தொல் காப்பியமே. என் ஆசிரியர், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அடிக்கடி கூறுவார் :—'தொல்காப்பியம் போன்று பகுத்தறிவுடன்,

அறிவியல் நெறிமுறையில் செய்திகளைப் பகுத்தும் தொகுத்தும் கூறும் தொன்மையான—இலக்கண நூல் வேறு மொழியில் இல்லை—என்பார். தென்னக இசை ஆய்வுக்கு இன்று வடமொழி நூல்களிலும் தெலுங்கு நூல்களிலும் தொடக்கம்—காட்டப்பட்டும் வடமொழி மூலமும் காட்டப்பட்டும் வருவது பெரிதும் வருந்தத் தக்கது; அது மெய்ம்மை வரலாறும் ஆகாது. இன்றுள்ள தமிழிசைக் கல்லூரிகள் இப் பிழையை இனியும் செய்துவராது தவிர்க்க ஆவன செய்தல் வேண்டும். தென்னக இசை எனும் செல்வி தொல்காப்பியத்தில் பிறக்கின்றாள்; பத்துப்பாட்டு, எட்டுத் தொகையுள் அந்த இசை எனும் செல்வக் குழந்தை தவழ்கிறாள்; சிலப்பதிகாரத்திலே நடை போடுகிறாள்; சிலம்பினுடைய சீரிய இரு பெரும் உரைகளிலே கவின்மிகு கன்னியாகிக் காட்சியளிக் கின்றாள்; நாயன்மாரின் தேவாரப் பாடல்களிலும்—ஆழ்வார்களின் பாடல்களிலும் இசைக் கன்னி மணம்புரிந்து, தாயாகிக் காட்சி அளிக்கின்றாள். இம் முறையிலே தென்னக இசை வரலாறு பாகு பட்டு வாகையுற்று விளங்குகிறது. இனித் தொல்காப்பியம் காட்டும் இசையின் காலக் கணக்குகளை வரிசையாகக் காண்போம்.

### 3 இசைக் காலக் கணக்குச் சிறப்பு

இசைக்கு எலும்புச் சட்டகம் போன்றது காலக் கணிதமே அதன்மேலேதான் இசைக் கோவைகள் (சுரங்கள்) எனும் தசையும் நரம்பும் கட்டப்படுகின்றன. இசையின் அடித்தளம் காலக் கணக் குகளே. இசையின் காலப் பகுப்பைத் தாய் என்றும் இசைக் கோவை யமைப்பைத் தந்தை என்றும்—பாடல்களைச் சேய்கள் என்றும் கூறலாம். எனவே தொல்காப்பியம் கூறும் இசைக்குரிய அடிப்படையான காலக் கணக்குகளை வரன்முறையாகக் காண்போம்.

### 4. எழுத்தின் அளவுகள்

ஓரளபு இசைக்கும் எழுத்துகள்—குற்றெழுத்துகள் என்றும் ஈரளவு இசைக்கும் எழுத்துகள் நெட்டெழுத்துகள் என்றும்—இரண்டு பெரும் பிரிவாகப் பிரித்தது செய்யுளுக்கும், இசைக்கும் பெருந் துணையாகும்.

> ''ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப''
> ''ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்ப''
>
> —நூன்மரபு - 3, 4

இங்கு ஓரளபு—ஈரளபு என்றது—குறிலுக்கும் நெடிலுக்கும் உள்ள விழுக்காட்டு அளவையும் குறிப்பது. இயற்றமிழுக்குக் கூறிய

அளபுகள் இசைத் தமிழுக்கும் உரியனவே; ஆயினும் இசைத் தமிழிலே நீட்டி ஒலிப்பதும் உண்டு என்றார்.

"அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளஎன மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்." —நூன்மரபு - 33.

## 5. இயற்றமிழுக்குப் பின் இசைத்தமிழ்

இங்குத் தொல்காப்பியர் சுரங்களுக்கு 'நரம்பு' என்றும், இசையியல் நூலுக்கு 'நரம்பின் மறை' என்றும் பாடுதல் பற்றிய இலக்கணநூலை—'இசையொடு சிவணிய நரம்பின் மறை' என்றும் சுட்டுகின்றார்.

இயற்றமிழுக்குக் கூறிய இலக்கணம் இசைத்தமிழுக்கும் கொள்ளுதல் வேண்டும் என்பதைத் தொல்காப்பியர் நூன்மரபில் முதலிலேயே சுட்டிவிடுகிறார். இவ் வுண்மையைப் பேராசிரியர் தம் உரையில் விளக்கியுள்ளார் :—"மற்றிதனை வெண்டுறைச் செய்யுட்கு முன் வைப்பின் என் எனின் இஃது இசைப் பாட்டாகலின், இனி வருகின்றது இசைத் தமிழாகலின் அதற்கு உபகாரப் பட இதனை இறுதிக்கண் வைத்தான் என்பது"—(தொல். செய். 242) பேராசிரியர் உரை. இதனால் நாம் அறிவது என்ன? இயற்றமிழுக்குப் பின்னர் அடுத்து நிற்பது இசைத்தமிழ்; இயற்றமிழுக்குரைத்தது—இசைத்தமிழுக்குப் பயன்படுவதே என்பதைத் தொல்காப்பியர் வேறு இடத்திலும் வற்புறுத்தியுள்ளார் :—

"அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோ ராறே"
—தொல். செய். 12.

## 6. அசை எனும் இசைக்காலப் பகுப்பு

(i) நேரசை—குறில் அல்லது நெடில்

(ii) நிரையசை—குறிலிணை அல்லது குறில்நெடில் மேற்கண்டவை தனித்தும் ஒற்றடுத்தும் வரலாம்.

| | நேரசை | எழுத்து | இன்றுள்ள சொல்கட்டு | தாள வாய்பாடு அளவு |
|---|---|---|---|---|
| i. | குறில் | அ—அல் | த—தம் | ஓரளவு |
| ii. | நெடில்— | ஆ—ஆல் | தா—தாம் | ஈரளவு |
| | நிரையசை | | | |
| iii. | குறிலிணை— | பல பலம் | தகி—தகிம் | ஈரளவு |
| iv. | குறில் நெடில் | பலா பலாம் | தகீ—தகீம் | மூவளவு |

## 7. சீர் என்பது என்ன?

சீர் என்பது சொற்றொடரைக் காலக் கணக்குப்படி பிரித்த பிரிவு. இந்தப் பிரிவு இரண்டசை சேர்ந்த சீர் என்றும் மூன்றசை சேர்ந்த சீர் என்றும் இருவகைப்படும்.

*"ஈரசை கொண்டும் மூவசை புணர்த்தும்*
*சீர் இயைந்து இற்றது சீர்எனப் படுமே"*

*—தொல். செய். 12*

எல்லாத் தாளங்களின் அடிப்படை அளவு—இரண்டும் மூன்றுமே. இவற்றின் பெருக்குத் தொகையே பிற எண்கள் யாவும் :—$2+2=4$; $2+3=5$; $3+3=6$; $2+2+3=7$; இவ்வாறே பிற. இனி, இரண்டு எண்தாளம் மூன்று எண்தாளம் ஆகிய இவற்றின் பெருக்கமே பிற அனைத்து எண்களின் தாளங்கள். எனவே அடிப்படை அளவுகளை முதற்கண் தொல் காப்பியர் வகுத்தது மிகமிக நுண்மாண் புலமை ஆகும்.

## 8. ஈரசைச் சீர்களின் இசைக்கால அமைப்பு

| சீர், | | இன்றுள்ள தாள வாய்பாடு. |
|---|---|---|
| i. நேர் நேர் | — | தாத் தீம்—தத் திம். |
| ii. நேர் நிரை | — | தாங் கிட—தத் ததீம். |
| iii. நிரை நேர் | — | தக தோம்—ததீம் தோம். |
| iv. நிரை நிரை | — | தகதின—கிடத் தக. |

சீர்களின் அளவு இசைத் தமிழில் காலப் படுத்துங்கால் நீண்டு ஒலிக்கும். இயற்றமிழில் திட்டமிட்ட மாத்திரை அளவுக்கு மேலே எழுத்துகள் ஒலித்தல் இல்லை.

## 9. 'சீர்'—என்பதின் சொற்பொருள் என்ன ?

இது பெயர்ச் சொல்லா வினைச் சொல்லா? பேராசிரியர் தொல்காப்பியத்தில் தரும் விளக்கம்:—"மற்றுச் சீர் என்றது என்னை எனின்—பாணி போன்று இலயம்பட நிற்றலின் அது சீர் எனத் தொழிற் பெயராம். என்னை? 'சொற்சீர்த் திறுதல்' என் புழித் தொழிற்படுத் தோதினமையின்" என்றார் பேராசிரியர்—(தொல். செய். 123. உரை). எனவே இவ்வுரை வழியே பொருள் காண்போம்:

(i) *சீர்த்தல்*—தொழிற் பெயர்; இதன் பொருள்—போதிய ஏற்ற அளவாய் அமைதல்.

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து"

எனும் திருக்குறளில்—சீர்த்தவிடத்து—என்பதற்கு 'ஏற்ற வாய்ப்பான அளவாய் அமைந்த போது—கொக்கு மீனைக் குத்திக் கவ்வும் என்பது பொருள். எனவே சீர்த்தல் என்பதற்குப் பொருள் அளவாய் அமைதல்.

(ii) *சீர்*=(ஏவல் வினை) ஏற்ற அளவில் அமை.

(iii) *சீர்*—(முதல் நிலைத் தொழிற்பெயர்) இதன் பொருள்—ஏற்ற அளவில் அமைந்த ஒன்று.

(iv) '*சொல் சீர்த்து இறுதல்*' (செய். 123)=சொல் ஏற்ற அளவில் அமைந்து தங்குதல். (இறு=தங்கு, பொருந்து) எனவே இதுகாறும் விளக்கியவாற்ருல்—'*சீர்*' என்பது முதனிலைத் தொழிற் பெயராய், ஏற்ற அளவில் அமைந்த சொல் பகுதிகளைச் சுட்டுவது என அறியலாம்.

**10. சீர் வகை :**

தொல்காப்பியர் ஒருசீர் முதல் எழுசீர் வரை குறிப்பிடுகின்ருர்; அடியார்க்கு நல்லார் தம் சிலப்பதிகார உரையில்—(சிலப் 3 : 16 உரை) சீர்கள் சேர்ந்தது தூக்கு என்ருர். 'ஒருசீர் கொண்டது செந்தூக்கு, இருசீர்—மதலைத் தூக்கு; முச்சீர்—துணிபுத் தூக்கு, நாற்சீர் கோயில் தூக்கு, ஐஞ்சீர்—நிவப்புத் தூக்கு, அறுசீர்—கழால் தூக்கு, ஏழுசீர்—நெடில் தூக்கு' என்ருர். (இவை யாவும் மிக்க காரணம் கருதி இட்ட தக்க பெயர்கள் என விரிவாக என் முனைவர் பட்ட ('டாக்டர் பட்ட தீசிசு') ஆய்வுக் கட்டுரையில் விரித்துரைத்துள்ளேன். பின்னர் செல்வியில் செவ்வி நோக்கி விளக்குவாம்.)

"ஒருசீர் செந்தூக்கு இருசீர் மதலை
முச்சீர் துணிபு நாற்சீர் கோயில்
ஐஞ்சீர் நிவப்பு அறுசீர் கழாஅலே
எழுசீர் நெடுந்தூக்கு என்மனுர் புலவர்"
—சிலப். 3 : 16 அடியா. உரை.

இந்தச் சொல் தொகுதி ஒலி அளவுகளை இன்று இசை நூலார் அலகு வகை என்பர்—ஓர் எண்ணிக்கை அளவு முதல் ஏழு எண்ணிக்கை அளவு வரை அமைத்து ஒவ்வொன்றிற்கு—அநுதுரிதம், துரிதம், திரிஸ்ரம், சதுஸ்ரம், கண்டம், திஸ்ரம், மிஸ்ரம் என எல்லாம் வடசொல் வழியாகத் தமிழிசைக் கல்லூரியில் தமிழிசையைக் கற்பித்துக்கொண்டு இருக்கிருர்கள். இவை யாவற்றையும் ஒப்பிட்டு ஒரு பட்டியலில் காண்போம்.

| தொல்காப்பியர் கூறுவது | அடியார்க்கு நல்லார் சிலம்பில் தரும் தூக்கு வகை | இன்றுள்ள அலகு வகை வடமொழி | உரிய தமிழ்ச் சொல் |
|---|---|---|---|
| 1. ஒரு சீர் அடி | 1 சீர்—செந்தூக்கு | 1 எண்—அநுதுரிதம் | அரைத் துரிதம் |
| 2. இரு சீர் அடி | 2 சீர்—மதலைத்தூக்கு | 2 எண்—துரிதம் | துரிதம் |
| 3. முச்சீர் அடி | 3 சீர்—துணிபுத்தூக்கு | 3 எண்—திரிச் சுரலகு | மும்மை அலகு |
| 4. நாற்சீர் அடி | 4 சீர்—கோயில்தூக்கு | 4 எண்—சதுஸ்ரலகு | நான்மை அலகு |
| 5. ஐஞ்சீர் அடி | 5 சீர்—நிவப்புத்தூக்கு | 5 எண்—கண்டலகு | ஐம்மை அலகு |
| 6. அறுசீர் அடி | 6 சீர்—கழால்தூக்கு | 6 எண்—திஸ்ரலகு | அறுமை அலகு |
| 7. எழுசீர் அடி | 7 சீர் நெடில்தூக்கு | 7 எண்—மிஸ்ரலகு | எழுமை அலகு |

இவை ஊடே சிறிது வேற்றுமைகள் உளவேனும் எண்ணிக்கை அளவிலே ஒன்றுபட்டு அமைந்துள்ளமை காண்க. (துரிதம்—என்பது தமிழ். துர்+இதம்=துரிதம்; 'துர்'—விரைவுப் பொருண்மை சுட்டும் வேர்ச் சொல்; 'துர்' வேர் வழி பிறக்கும் பிற தண்டமிழ்ச் சொற்கள்—துர்+ஐ=துரை; துர்+அகம்=துரகம், துர்+அத்து=துரத்து முதலியன; நன்கு விளக்க இஃது இடம் அன்று. விடுக்க (அது போலவே அலகு என்பது பைந்தமிழ் இலக்கிய இலக்கணம் பயின்ற வழக்குப் பண்டைத் தண்டமிழ்ச்சொல். பின்னர்க் காண்பாம்; இப்போது எடுத்த பொருள் தொடுப்பாம்). தூக்கு என்பது தொல்காப்பியர் காலத்திற்கும் முந்தியிருந்தே தமிழகத்தில் வழக்கில் இருந்து வந்தது. "வஞ்சித் தூக்கே செந்தூக்கு இயற்றே"—(செய். 70) என்று தொல்காப்பியர் செந்தூக்கை மட்டிலும் கூறியுள்ளார்; பிறவகைத் தூக்குப் பற்றிச் சிலம்பில் விளக்கம் பெறுகிறோம். தென்னக இசை நூல்—சிலப்பதிகாரத்தில் உள்ளது. தென்னக இசையானது ஒரு பறவை எனில் அதன் உடல்—சிலம்பு; தொல்காப்பியமும் பாட்டும் தொகையும் ஒரு பக்கச் சிறகு; பெரியபுராணம் வரை உள்ள இசைக் குறிப்புகள் மறுபக்கச் சிறகு.

(தொடரும்)

# பாரி

[கழக இலக்கியச்செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

"உயிர்க்கு ஊதியமாவன ஈதலும் இசைபட வாழ்தலும்" என்றார் பொய்யாமொழியார். இம் மொழிக்கு ஏற்பச் சங்கநாளில் வாழ்ந்த பெருமக்களை 'எண்மர்' என எண்ணிக் கணக்கிட்டனர். அவருள் தலைமையாளன் 'பாரி' யாவான்.

பாரியின் புகழ் 'முல்லை'க்குத் தேர்ஈந்தது என்பதை நாடறியும். இப் பாரியொடும் சேர்த்து, இணைத்து எண்ணப் பெறுபவன் பேகன்; அவன் மயிலுக்குப் போர்வை வழங்கிய வள்ளியோன். ஏனை அறுவரினும் இவ்விருவர் புகழும் புலவர்களால் பெரிதும் போற்றப் பெறுதல் கண்கூடு.

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்"
(பழமொழி. 74; புறப். வெண்பா. 194)

எண்மருள் பாரியும், பேகனும் எடுத்தோதிச் சிறப்பிக்கப் பெறுவது ஏன்? முல்லையும் மயிலும் மொழித்திறம் அறியா உயிரிகள்; அவை தேடிவந்து பாடிப் பரிசு வேண்டியன அல்ல; அவற்றைத் தாமே கண்டு, தண்ணளியால் வழங்கப்பெற்றன தேரும், போர்வையும்! தேடிவந்து பாடிநின்ற புலவர்க்கும் கூத்தர்க்கும் பிறர்க்கும் வழங்கும் கொடைகளினும், இவற்றுக்கு வழங்கிய கொடை அளப்பரும் வளப்பெருமை வாய்ந்தது; ஆகலின் தனிச் சிறப்புற்றன.

"பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி" (புறம். 200)

என்றும்,

"உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்" (புறம். 141)

என்றும் புறப் பாடல்களால் பாராட்டப் பெறுகின்றன. இவற்றைப் பாடியவர்களோ முறையே, 'கபிலபரணர்' என்று சான்றோரால் சிறப்பிக்கப் பெறும் சீர்த்தியர்.

முல்லை, மயில் ஆகியவற்றுள்ளும் முல்லை ஓரறிவுயிரி; மயிலைப் போல் இடம்பெயர்தல் அறியாதது; அன்றியும் ஐயறிவு மயிலைப்

போல் களிப்பும் கவலையும் பிறவும் வெளிப்படக் காட்ட அறியாதது; உணர்வு நிலையில் மிகக் குறைந்தது. இருந்தும் தான் உணர்ந்த உணர்வே உருவாய் உருகி நின்று, அப் பேரருள் பெருக்கத்தால் அதற்குத் தேரீந்த பெருமகன் பாரிவேள் ஆகலின் பேகனினும் அவன் முதன்மை யுற்றான்.

பாரியின் சிறப்பு முல்லைக்குத் தேரளித்த அளவில் நின்றுவிட வில்லை. தனக்கு உரிமையாக இருந்த முந்நூறு ஊர்களையுமே முழுமையாகப் பரிசிலர்க்கு வாரி வழங்கிவிட்டான். அவன் வழங் காமல் வைத்திருந்தது பறம்பு மலை ஒன்றுமட்டுமே! அன்றியும், தன்னையும், தன் உயிரன்புப் புலவர் கபிலரையும் பிறர்க்கென வழங்கினான் அல்லன். இதனைக் கபிலர் பெருமானே,

''முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே'' (புறம். 110)

என்று பாடுவதால் அறியலாம்.

இத்தகு மேதக்க கொடையாளன் 'பாரி' என்னும் பலர் புகழ் பெயர் தாங்கிய பெற்றியை அறிதல், பெருகிய இன்பம் பயப்பதுடன் மூந்தையோர் பெயர்சூட்டும் திறத்தை அறிந்து மகிழ்தற்கும் வாய்ப்பாம்.

'பார்' என்னும் சொல்லுடன் 'இ' என்னும் இறுதிநிலை இணைந்து 'பாரி' என்னும் பெயர் அமைந்ததாம். 'காரி' 'ஓரி' என்னும் பெயர்களும் இவ்வாறு அமைந்தனவே.

'பார்' என்பது 'பரவுதல்' பண்பால் அமைந்த பெயர்; அனைத்துப் பொருள்களையும் நீர்ப்பரப்பையும் அடக்கிப் பரந்து கிடக்கும் உலகம் 'பார்'; வண்டி, தேர் ஆகியவற்றின் அச்சின்மேல் பரவிக்கிடக்கும் பலகைப் பரப்பு, 'பார்'; நீர் பாய்ச்சுதற்காக நெடி தகன்ற பரப்புடையதாகச் செய்யப்பெற்றதும் பல பாத்திகளைத் தன்னகத்துக் கொண்டதும் ஆகிய நிலப்பரப்பு, 'பார்'; அகன்று விரிந்த கல்லும், கல்நிலமும் பார்; ஆழ்ந்து நோக்குதல் இன்றி அகன்று நோக்குதலே பார்த்தல்.

இனிப், 'பாரி' என்னும் சொல்லும் பரவுதல் பண்பாலேயே கட்டில், கடல், உடற்பருமை, உடை, பூந்துகள், புவி ஆகியவற்றைக் குறிக்கும்; புகழ் பரப்பும் இல்லாளைப் 'பாரி' என்பதும் இக் கரணியம் கொண்டேயாம்.

"புகழ் புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை"

என்பது திருக்குறள். (59).

'பாரித்தல்' என்பது விரித்துரைத்தல், பரப்புதல், வளர்த்தல், மிகுதல் முதலிய அகன்மைப் பொருளிலேயே வரும்.

"அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்கள்" (நாலடி. 151)

"பகல்செல் மண்டிலம் பாரித் தாங்கு" (பெரும். 442)

"தந்நலம் பாரிப் பார்" (திருக். 916)

"பயனில பாரித் துரைக்கும் உரை" (திருக். 193)

"பாரிய பராரை வேம்பு" (நற். 218)

என்பவற்றை நோக்குக. 'ஓங்கு தாங்காக' உள்ள மரம் 'பாரியான மரம்' என்றும், ஓங்கு தாங்காக உள்ளவர் 'பாரியானவர்' என்றும் இன்றும் வழங்கப் பெறுவதை அறிக. இவற்றை நோக்குவார், 'பாரி' என்னும் பெயர்ப் பொருளின் நயம் நன்கறிந்து மகிழ்வர்.

பாரி, உடலால் பரியவன்; உருவால் உயர்ந்தவன்; பரந்தகன்ற மார்பினன்; தடநெடுங் கையினன்; பரந்தோங்கு புகழாளன். இவற்றைக்,

"கூர்வேல் குவைஇய மொய்ம்பில் தேர்வண் பாரி" (புறம். 118)

"தேர் வீசிருக்கை நெடியோன்" (புறம். 114)

"நெடுமாப் பாரி" (புறம். 201)

"மலர்ந்த மார்பின் மாவண் பாரி" (பதிற். 61)

"இலங்குதொடித் தடக்கைப் பாரி" (புறம். 337)

"பரந்தோங்கு சிறப்பிற் பாரி" (புறம். 200)

என வருவன தெளிவித்தல் அறிக.

பரந்து விரிந்த உலகினும், பரந்து விரிந்தது 'புகழ்' என்பதை, "மண்தேய்த்த புகழ்" என்னும் இளங்கோவடிகள் வாக்காலும் (சிலப். 1 : 36) அதற்குப் "பூமி சிறுகும்படி வளர்ந்த புகழ்" என்று அரும்பதவுரை யாசிரியரும், "மண்ணைத் தொலைத்த புகழினை யுடையான்; புகழ்வளரப் பூமி சிறுகலான்" என்று அடியார்க்கு நல்லாரும் வருக்கும் உரைகளாலும் கண்டுகொள்க.

பரவிய புகழுக்கு ஒருவனாகப் பாரி திகழ்ந்தான் என்பதைப்,

"பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்" (புறம். 107)

என்று கபிலர் குறிப்பதால் அறிக! பண்டைத் தமிழ் வேந்தரும், புலவர் பெருமக்களும், பொதுமக்களும் தம் மக்களுக்குப் பொருள் நலம் சிறந்த பெயர்களைச் சூட்டித் தமிழ்வாணராகத் திகழ்ந்த சிறப்பை அறிந்து மகிழ்க! அம் முறைமையைப் போற்றி முத்தமிழ் வளர்க்க!

———

# தமிழிலிருந்து பிறந்தது சப்பானிய மொழி!

"தமிழிலிருந்துதான் சப்பானிய மொழி பிறந்திருக்க வேண்டும்!"

இந்த ஆராய்ச்சியை மேற்கொண்ட சுசுமோ ஒநோ, ஒரு சப்பானியப் பேராசிரியர். உடன் மட்சுபாரா என்ற இன்னொரு சப்பானிய மொழி ஆராய்ச்சியாளரையும் அவர் அழைத்து வந்திருந்தார். தவிர, சப்பானிய டெலிவிஷன் நிலையத்தைச் சேர்ந்த நான்கு புகைப்பட நிபுணர்களும் வந்திருந்தார்கள். இவர்கள் அனைவரும் கிராமம் கிராமமாகப் படையெடுத்து மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டார்கள்.

இவர்கள் ஆராய்ச்சி செய்த முறையில் புதுமை தெரிந்தது. குறிப்பிட்ட இடங்களுக்குச் சென்று அங்குப் பழங்கால ஓலைச் சுவடிகள் இருக்கின்றனவா, பழம் பெருமையைக் காட்டும் புராதன சிற்பங்களோ, கல்வெட்டுக்களோ இருக்கின்றனவா, சரித்திரச் சிறப்பு வாய்ந்த ஆதாரங்கள் எவையேனும் இருக்கின்றனவா என்று மட்டும் ஆராயாமல், நேரடியாக அப்பகுதி வாழ் மக்களிடையே பேசி, பழகி, தமிழுக்கும் சப்பானிய மொழிக்குமிடையே பாரம்பரியம் பொலிந்த பாலம் ஒன்று இருக்கக் கண்டார்கள்.



நகாத்தி கிராமத்திலுள்ள சிறுவர்களை அழைத்து, சில சப்பானியச் சொற்களைச் சொல்லி, உச்சரிக்கும்படி கேட்டார்கள்.

அம்மா, ஐயன், தத்தா, அண்ணே, கீறு என்ற சப்பானிய சொற்களை - ஆம், அவை முறையே அம்மா, அப்பா, தாத்தா, கீறல் என்று தமிழில் பொருள்தரும் சப்பானியச் சொற்கள்தாம்; —உச்சரிக்கச் சொல்லிக் கேட்டபோது சிறுவர்கள் எந்தத் தடையுமில்லாமல் சரளமாக அந்த வார்த்தைகளை, அவர்கள் எதிர் பார்த்த உச்சரிப்புடன் மொழிந்திடக் கேட்டார்கள். இன்று, நேற்றல்ல- ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சப்பானிய மொழியும், தமிழும் தொடர்பு கொண்டிருக்கின்றன என்ற முடிவுக்கு வந்திருக்கிறார் பேராசியர் ஒநோ.

கடந்த ஏப்ரல் மாதம் இந்தியாவுக்கு—குறிப்பாகத் தமிழ் நாட்டுக்கு - முதன் முறையாக வந்த திரு ஓநோ இப்போது மீண்டும் வந்து தம் ஆராய்ச்சியைத் தொடர்ந்திருக்கிறார்.

திருச்சியிலுள்ள சோமலேசன்பேட்டையிலும், அங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்கள், பேச்சுமுறை ஆகியவற்றை மிக உன்னிப்பாகக் கவனித்து ஆராய்ந்திருக்கிறார். தவிர, சென்னையை அடுத்துள்ள சில கிராமங்களிலும், பழனி போன்ற இடங்களிலும் இவர் இருமொழிகளுக்குமான தொடர்பு பற்றிப் பல விவரங்களைச் சேகரித்துள்ளார்.

சமீபத்தில் சென்னையிலுள்ள சப்பானிய தூதர் திரு மஸனரி ஒஸாகி அவர்கள் இல்லத்தில் பத்திரிகை நிருபர்களைச் சந்தித்துத் தம் ஆராய்ச்சி பற்றிய விவரங்களைச் சொன்னார் பேராசிரியர் ஓநோ.

இவருக்கு இந்த ஆராய்ச்சியை மேற்கொள்ள வேண்டு மென்று எப்படித் தோன்றியதாம்?

"சப்பானிலுள்ள காகுஷைன் பல்கலைக் கழகத்தின் மொழியியல் பிரிவுப் பேராசிரியனாகப் பணியாற்றும் நான் தற் செயலாகச் சில தமிழ்ச் சொற்களின் உச்சரிப்புக்களைக் கேட்க நேர்ந்தது. அது சப்பானிய உச்சரிப்புக்கு ஒத்துப் போகவே, இரு மொழிகளுக்கும் அடிப்படைத் தொடர்பு இல்லாமல் இருக்காது என்று தீர்மானித்தேன். அதை நிரூபிக்கத் தமிழ் பேசும் இடங்களில் குறிப்பாக-இன்னும் கூடப் பண்டைத் தமிழின் சாயல் இருக்கக் கூடிய இடங்களில்—ஆராய்ச்சியை மேற்கொள்ள விழைந்தேன். அதுதான் என்னுடைய இப் போதைய வருகைக்குக் காரணம்" என்றார் திரு, ஓநோ.

பிரபுசங்கர்

நன்றி: தினமணி கதிர் 1-11-1980.

———

## ஒப்பிலாச் சிறப்பு

உலக இலக்கியத்தில் காணமுடியாத சிறப்பு நமக்கு உண்டென்றால், பெண்பாற் புலவர்கள் நம் நாட்டில்தான் உண்டு. அவர்கள் தந்த அறநெறிச் சிறப்பு இன்று உலக இலக்கியங்களில் தலைசிறந்து நிற்கிறது.

பேரறிஞர் அண்ணா

ஆசிரியருக்குக் கடிதம்:

## பல்கலைக் கழகங்களும் பெயர்களும்

உலக முதன் மொழியாம் அமிழ்தினும் இனிய தமிழ் மொழி வழங்கும் தமிழ்நாடு அறிவிற்சிறந்த புலவர்களை உலகிற்களித்த தனிச் சிறப்புடைய நாடு. அத்தகைய நாட்டில் பண்டைத் தமிழ்ப் புலவர்கள், அறிஞர்கள் ஆகியோரின் புகழ் என்றும் நிலைத்து நிற்கச் செய்ய வேண்டுவது இந்நாள் தமிழக அரசின் இன்றியமையாக் கடனாகும்.

தமிழவேள் கலைஞர் அவர்கள் தம் ஆட்சிக் காலத்தில் திருவள்ளுவருக்குத் திருக்கோட்டத்தினைத் திறம்பட எழுப்பியது போலவும் பழம் புலவர்கட்கு நினைவுச் சின்னங்கள் அமைத்தமை போலவும், தமிழகத்தில் புதியனவாகத் தோன்ற விருக்கும் இரு பல்கலைக்கழகங்களுள் ஒன்றான திருச்சிப் பல்கலைக் கழகத்திற்கு ஒல்காப் பெரும் புகழ் பெற்ற இலக்கண நூலை இயற்றிய பெரும் புலவர்மாமணி தொல்காப்பியரின் பெயரை வைப்பது சாலச் சிறந்ததாகும். அங்ஙனமே புதிதாகத் தோன்ற விருக்கும் மற்றொரு பல்கலைக் கழகத்திற்குத் தந்தை பெரியார் பெயரை வைக்க வேண்டும் என்று அவர்தம் நூற்றாண்டு விழாவின் போதே அரசு முடிவெடுத்ததை நாடு நன்கறியும்.

தொல்காப்பியம் தமிழன்னையின் உடலென்றால் அவளது உயிராக விளங்குவது திருக்குறளாகும். அத்தகைய குறளை உலகுக்களித்த ஒப்பற்ற புலவர் பெருந்தகை திருவள்ளுவர் பெயரால் ஒரு பல்கலைக் கழகம் விளங்குமாயின் அஃது எத்துணைச் சிறப்புடைத்தாகும்!

எனவே மதுரைப் பல்கலைக் கழகத்திற்குக் காமராசர் பெயர் வைத்தது போன்று உலகம் அறிந்த ஒரு பல்கலைக் கழகமாகத் திகழும் சென்னைப் பல்கலைக்கழகத்திற்குத் திருவள்ளுவர் பல்கலைக் கழகம் என்று பெயரிடுதல் வேண்டும்.

அடுத்து உலகம் போற்றும் ஒப்பற்ற முத்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் பெயரில் ஒரு பல்கலைக் கழகம் அமைதல் நன்றன்றோ? எனவே, கோவையிலுள்ள வேளாண்மைப்பல்கலைக் கழகத்திற்கு இளங்கோவடிகள் வேளாண்மைப் பல்கலைக் கழகம் என்று பெயரிடுதல் பாரோர் போற்றும் பயனுடைய செயலாகும். இதனை இன்றைய அரசும், துணை வேந்தர்களும், பல்கலைக்கழகங்களின் ஆட்சிக் குழுவினரும் சிந்தையில் வைத்துச் செயல் படுவார்கள் என நம்புகிறேன்.

இங்ஙனம்

**இர. திருஞானசம்பந்தன்,**

துணைத்தலைவர், தமிழாசிரியர் கழகம், சென்னை.

# செய்திகளும் குறிப்புக்களும்

## வீரமாமுனிவர் மூன்றாவது நூற்றாண்டு விழா

தமிழ் இலக்கண இலக்கியங்கட்கு ஆக்கமளித்த மேலைநாட்டறிஞர் வீரமா முனிவரின் 300ஆவது பிறந்தநாள் விழா 9—11—80 அன்று சென்னை மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில், அருட்திரு அருளப்பா அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. டாக்டர் பி. எம். ரெக்சு அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். சட்டமன்ற மேலவைத் தலைவர் முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் வீரமாமுனிவர் படத்தைத் திறந்து வைத்தனர். வீரமா முனிவரின் புகழ் பரப்பிய பேராசிரியர் 'ரம்போலா மாஸ்கரேனசு, ஞானப் பிரகாசம் பாதிரியார் ஆகியோர்க்குத் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் பொன்னாடை போர்த்திச் சிறப் பித்தார்.

## 'ஆனந்த விகடன்' பொன் விழா

புகழ் பெற்ற கிழமை இதழான ஆனந்த விகடனின் பொன் விழா சென்னையில் முறையே நவம்பர்த் திங்கள் 7, 8, 9ஆம் நாள்களில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. வள்ளுவர் கோட்டம், மியூசிக் அகாடமி, சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டுவிழா மண்டபம் ஆகிய இடங்களில் முறையே முதல் நாள் விழா தமிழக முதல்வர் தலைமையிலும், இரண்டாம் நாள் விழா கலைஞர் கருணாநிதி அவர்கள் தலைமையிலும், மூன்றாம் நாள் விழா முத்தமிழ்க் காவலர் முனைவர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையிலும் நடை பெற்றன. இம் மூன்றுநாள் விழாக்களிலும் கலைஞர்கள், அறிஞர்கள், கவிஞர்கள், இதழாசிரியர்கள் ஆகியோர் பங்கு கொண்டு அரிய உரை யாற்றினர். இரண்டாம் நாள் விழாவில் கலைஞர் தலைமையில் நடை பெற்ற கவியரங்கம் மிகச் சிறப்பாக அமைந்திருந்தது. ஆனந்த விகடன் தொடர்ந்து வளர, வாழ நம் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

குறிப்பு ; தற்போது நம் கழகத் தலைமை நிலையமும் அப்பர் அச்சகமும் நடைபெற்று வரும் இடம் முன்னர் 'ஆனந்த விகடன்' அலுவலகமாக இருந்தமை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. 1948இல் டேவிட்சன் தெருவில் இயங்கி வந்த அச்சகம் வேறு இடம் தேடி அல்லற்பட்ட காலை, ஆனந்த விகடன் (மவுண்ரோடு) மலைச்சாலைக்கு மாற்றப்பட்டதோடு, திரு. வாசன் அவர்கள் தமது அலுவலகத்தை மாற்றும் செய்தியினை நமக்கு அறிவிக்க அவ் விடத்தில் கழகமும், அப்பர் அச்சகமும் நிலைபெற்று, நடைபெறும் வாய்ப்பு ஏற்பட்டமை திருவருட் செயலாகும்.

## சர். சி. பி. இராமசாமி ஐயர் நூற்றாண்டு விழா

சர். சி. பி. இராமசாமி ஐயர் அவர்களின் நூற்றாண்டு விழா 9—11—80 அன்று மாலை சென்னைத் தேனாம்பேட்டையிலுள்ள 'குரோவ்' என்னுமிடத்தில் திரு. ஐயர் நினைவுக்கூடக் குழுவினரால்

சீருஞ் சிறப்புமாக நடத்தப்பெற்றது. தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரனவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினர். இந்தியாவின் துணைக் குடியரசுத் தலைவர் மாண்புமிகு எம். இதயதுல்லா அவர்கள் சர். சி. பி. இராமசாமி ஐயர் அவர்களின் நினைவுச் சின்னத்தைத் திறந்து வைத்தார்.

## பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

மதுரை, காமராசர் பல்கலைக் கழகத்தின் முன்னுள் துணைவேந்தர், பேராசிரியர், சை. வே. சிட்டிபாபு அவர்களின் 60ஆவது ஆண்டு நிறைவு விழா 5—11—80 அன்று, சென்னை ஏ.வி.எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது. இவர் கழகப் பணிகளைப் பாராட்டி வேண்டும் நல்லுதவிகளைச் செய்யும் பண்புடையவர். இவர் மேலும் நற்பணி பல புரிந்து பவளவிழா முத்து விழாக்களைப் பெற்று நீடினிது வாழ்வாராக.

## தமிழ் மாநிலம் அமைத்த தமிழரசுத் திருநாள்

1—11—80 அன்று மாலை, சென்னை இராசாசி மண்டபத்தில் தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவர் முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் தமிழ் மாநிலம் அமைத்த தமிழரசுத் திருநாள் நடைபெற்றது. செய்தி அறநிலையத்துறை அமைச்சர் இராம. வீரப்பன், மற்றும் அறிஞர் பலர் உரையாற்றினர்.

## கந்த கோட்டத் தல வரலாற்று நூல் வெளியீட்டு விழா

அருள்மிகு கந்தசாமிகோயில் என வழங்கும் அருள்மிகு முத்துக்குமாரசுவாமி அறநிலையத்துக் கந்தகோட்டத் தெய்வ மணி மாலை நீண்ட நேர இசைத்தட்டின் முதற் பகுதி வெளியீடும் **கந்த கோட்டத் தல வரலாறு** என்னும் நூல் வெளியீட்டு விழாவும் 9-11-80 அன்று மாலை திருக்கோயில் எழில்மிகு பந்தலில் தமிழகச் சட்டமன்றப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றன.

## ஆளுநர் உயர்திரு பிரபுதாஸ் பட்வாரி விலகலும், புதிய ஆளுநர் பதவி ஏற்றலும்

சென்னை மாநகர மக்கள் குழு ஒன்றின் சார்பில், முன்னுள் தமிழக ஆளுநர் திரு. பிரபுதாஸ் பட்வாரி அவர்கட்கு 29—10—80 அன்று மாலை, இராசாசி மண்டபத்தில் ஒரு பாராட்டுக் கூட்டமும் வழியனுப்பு வாழ்த்து நிகழ்ச்சியும் நடைபெற்றன. திரு பட்வாரி அவர்கள் 10—11—1977இல் மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு வருகை தந்து பார்வையிட்டுப் பாராட்டியதும், 4-11—79இல் மறைமலையடிகள் நூல்நிலைய 20ஆம் ஆண்டு நிறைவுவிழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தமையும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கவை.

**புதிய ஆளுநர் பதவி ஏற்றல்:** முன்னர் மகாராட்டிரத்தின் ஆளுநராகவிருந்த மாண்புமிகு சாதிக் அலி அவர்கள் 4—11—80 அன்று தமிழ்நாட்டு ஆளுநராகப் பதவி ஏற்றார். இப் பதவிஏற்பு விழா

சென்னை இராசாசி மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. புதிய ஆளுநர்அவர்கள் தமிழ்நாட்டின் உயர்வுக்கும் தமிழின மேன்மைக்கும் வழி வகைகள் காண்பார் என எதிர்பார்த்து, அவருக்கு நம் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## கலைமாமணி நாரண துரைக்கண்ணன் 75ஆவது பிறந்தநாள்விழா

மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் 8—10—80 அன்று மயிலை பாரதிய வித்தியாபவன் அரங்கில், கலைமாமணி (ஜீவா) நாரண துரைக் கண்ணன் அவர்களின் 75ஆவது பிறந்த நாள் விழாவும், அவர் தமிழக அரசின் திரு. வி. க. விருது பெற்றதற்கான பாராட்டு விழாவும் நடை பெற்றன. சட்டமன்ற மேலவைத் தலைவர் முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். மாண்பு மிகு அமைச்சர் ராம விரப்பன் 'ஜீவா' அவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## முன்னாள் முதல்வர் பக்தவத்சலனார் பிறந்தநாள் விழா

விடுதலைப் போரில் பங்கு கொண்டு பன்முறை சிறை ஒறுப்புக் களுக்கு ஆட்பட்டவரும், அரசியலில் ஆட்சித்திறம் படைத்தவருமான முதுபெருந் தலைவர் திரு. மீ. பக்தவத்சலனார் அவர்களின் பிறந்தநாள் விழா 18 – 10 – 80அன்று மயிலை ஏவி.எம். திருமண மண்டபத்தில் சிறப் பாக நடைபெற்றது. நடுவணரசு அமைச்சர் ஜெயில்சிங், தமிழக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி, மைய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமன், ஆர். வி. சாமிநாதன், ஜி கே. மூப்பனார், சி. ஆர் பட்டாபிராமன் ஆகியோர் விழாவில் பங்கு கொண்டு சிறப்பித்தனர்.

## வானொலியில் தமிழ் ஒலிக்க வேண்டும்

"வானொலியில் தமிழ்ச் செய்திகள் படிக்கும்போது வடமொழி கலந்த தமிழில் படிப்பதை விடுத்துச் செய்திகளைத் தூய தமிழில் படிக்க வேண்டும். குறிப்பாக 'ஆகாசவாணி' என்பதற்குப் பதிலாக வானொலி என்னும் தமிழ்ச் சொல்லையே பயன்படுத்த வேண்டும் என்று 30-10-80 அன்று புதுதில்லியில் நடைபெற்ற செய்தி மற்றும் ஒலிபரப்புத்துறைக் குரிய நாடாளுமன்ற ஆய்வுக்குழுக் கூட்டத்தில் தமிழக நாடாளுமன்ற உறுப்பினர் திரு. க. அருச்சுனன் வலியுறுத்திக் கூறினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ௶௬–௬௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ந. தியாகராசன் அவர்கள், மேலப்பெரும்பள்ளம் | 5—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி. லிப்.